

# பிரதிபாவின்

**வாசகர்கள், ஆதரவாளர்கள் எல்லோருக்கும்**
**பவ [தமிழ்] புத்தாண்டு வாழ்த்துக்கள்**

# சித்தர்கள் காட்டிய யோகநெறி

ஆசிரியர் :
ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கரர்
**டாக்டர் "நஜன்"**
(பிரதிபானந்தா)



பிரதிபா பிரசுரம்
தோற்றம்: நவராத்திரி 1973

பிரசுரித்தவர் :
**என். லலிதாம்பாள்**

**பிரதிபா பிரசுரம்**
39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600 004.
தொலைபேசி : 4 9 4 0 7 2 0



[விலை : ரூ. 26-00

சித்தர்கள் காட்டிய யோகநெறி
(Siddargal Kattiya Yoganeri)

முதற் பதிப்பு : ஜூன் 1994

விலை ரூ. 26-00



பிரதிபா பிரசுரம்
106

## பொருளடக்கம்



அச்சிட்டோர் : சிந்தாமணி அச்சகம், சென்னை - 4

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகள்
ஸ்ரீமடம், காஞ்சீபுரம்.



# ஸ்ரீமுகம்

*முகாம் :* *தேதி : 16-3-94*

நம் பாரத தேசத்தின் பண்டைய வைத்ய முறைகள். வேதத்தை ஒட்டிய நான்கு உப வேதங்களில் ஒன்ருன ஆயுர் வேதத்தில் உருப்பெற்றவை. பிற்காலத்தில் ஸித்த புருஷர்களால் வகுக்கப்பட்ட நோய்த்தடுப்பு, நோய்ச் சிகிச்சை முறைகளுக்கு ஸித்த வைத்யம் எனப் பெயர் ஏற்பட்டது.

சித்தம் என்ற மனதை அடக்கி சாந்தம் எனும் சிவத்தில் நிறுத்துவதே ஸித்தியாகும். ஸ்ரீ பரமேச்வரனே ஸித்தர் வேஷத்தில் எண்வகை ஸித்திகளை உபதேசித்த வரலாறு திருவிளையாடல் புராணத்தில் காணப்படுகின்றது. பல ஸித்த புருஷர்கள், நமது தமிழகத்தில் தோன்றி ஸித்திகளைப் பற்றிப் பாடியுள்ளனர், சிலர் சிகிச்சை முறைகளையும் வகுத்துள்ளனர்.

சென்னை மாநகரில் இயங்கும் பிரதிபா பிரசுராலயத்தினர், ''சித்தர்கள் காட்டிய யோக நெறி'' என்ற தலைப்பில், ஒரு சிறு நூலை வெளியிட்டுள்ளனர், இதில் சித்துக்கள், சித்தி பெறும் வழி, மூலிகைகளின் உபயோகம், மற்றும் ரஸ சாஸ்தர நுணுக்கங்கள் போன்ற கருத்துகள் பற்றிய, சிவவாக்யர். தாயுமானவர், பத்ரகிரியார், போகர், பாம்பாட்டி சித்தர் போன்ற ஆன்ருேர்களின் பாடல்கள் பிரசுரமாகியுள்ளன. மேலும் மானிடன் ஆரோக்யமாக நீண்ட காலம் வாழ்வதற்கான உபாயங்கள் பற்றிய கருத்துகளும் நூலில் இடம் பெற்றுள்ளன.

இச் சிறு புத்தகத்தைப் பெற்றுப் படித்து, தமிழக மக்கள் நலம்பெற வேணுமென, காஞ்சீ காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் நல்லாசிகளை வழங்கியுள்ளார்கள்.

**நாராயணஸ்ம்ருதி**

# முகவுரை

''குருவே ஸர்வ லோகானும், பிஷயே பவ ரோகினும்
நிதயே ஸர்வ வித்யானும், தக்ஷிணுமூர்த்தயே நம:

அஞ்ஞான இருளை விலக்கி, ஞானமாகிய ஒளியை நாடி உணர்ந்திட. ஆதாரமாக அமைந்திட்ட குரு திருவடிகள் என் சிரஸில் என்றும் நிலைபெற்று நிற்கட்டும்.

''சித்தர்கள் காட்டிய யோக நெறி'' என்ற இந்நூல் திரு' நஜன் அவர்களின் தொடர் தொகுப்புகளில் ஒன்ருக வெளி வருகிறது. சித்தர்களின் தத்துவம், மனித வாழ்க்கையில் பின் பற்றி பயன்பெறக் கூடிய வகையில் எளிமையாக தந்திருக் கிருர். யோக வாழ்க்கை முறைகளையும், அதனை கடைப்பிடிக் கும் வழியினையும், முயன்று வெற்றி பெற்ருல் கிடைக்கும் பயன் களையும் அழகாக எடுத்துக் காட்டியுள்ளார்.

மனிதன் மனிதனுக வாழ்வதற்கும், இடைவிடாத முயற்சி யின் பயனுக தெய்வத்திற்கு ஒப்பாக உயர்வதற்கும் தேவை யான மன பயிற்சி முறைகளை சித்தர்கள் தந்திருக்கிருர்கள். மனிதன் மனிதனுக மட்டும் இருந்ததில்லை, இருப்பதுமில்லை. இதனை ஒரு சித்தர்

''மனிதரிலே மரமுண்டு, விலங்குண்டு, பறவையுண்டு
மனிதரிலே மனிதருண்டு, வானவரும் மனிதராய்
வருவதுண்டு''

என்று பாடியிருக்கிருர். யோக நெறியிலே வாழ்க்கையை பயிற்றுவித்து கொண்டவர்கள் வானவர் தன்மையை கொண்ட மனிதராவார். பிறப்பிலே மனிதனுய் உண்டானவர் வானவர் தன்மையைப் பெறுவது சாத்தியமா என்று தோன்றலாம். ஆண்டுதோறும் மயிலையிலே நடைபெறும் அறுபத்து மூவர் உற்சவமே இதற்கு தக்க சான்ருகும். நாயன்மார் அறுபத்து மூவரும் மனிதராகப் பிறந்தவர்கள்தான். இந்த வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தமையினுல் இன்றைக்கு தெய்வமாக போற்றி வணங்கப்படுகிருர்கள். இந்தப் பொய்யான உடம்பை வைத்துக் கொண்டு மெய்யான இறைவனை நாடி, நிலையான மெய்யாக மாற்றிக் கொள்வதற்கு வழிமுறைகளை சித்தர்கள் தங்கள் பாடல்கள் மூலமாக தந்திருக்கிருர்கள்.

சித்தர்களின் தன்மையை கைவல்ய நவநீதம் என்ற நூலிலே காணமுடிகிறது. சித்தர்களை நான்கு வகையாக பிரித்து சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் பிரம வித்து' பிரம வரன். பிரம வரியான் மற்றும் பிரம வரிட்டன் என்ற நான்கு வகை யாகப் பிரிக்கப்பட்டனர்.

பிரம வித்துக்கள் சாதாரண மனிதரைப் போலவே தங்கள் நடை உடை பாவனைகளுடனும், இயல்பாக செய்ய வேண்டிய கருமத்தை செய்து கொண்டும் இருப்பார்கள். எந்த வித

உணர்ச்சியும் அவர்களை பாதிக்காது. எது நடந்தாலும் அமைதியாகவே இருப்பார்கள். பிரமவரன் பிரமவரியான் சமாதி ஞானத்தில் ஈடுபட்டவர்கள். உடலுக்கு தேவையான உணவை தேடி பெறுபவன் பிரமவரன். பிறரால் உணவு பெறப்பட்டு உண்பவன் பிரமவரியன். தானும் தேடாது, பிறராலும் பெறப்படாது. உணவு உண்பது என்கிற உணர்வே இல்லாதவன் பிரமவரிட்டன். சமாதி நிலையில் தீவிரமாக ஈடுபட்டவன் பிரமவரிட்டன். இவ்வாறாக சித்தர்களின் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது இவர்கள் தங்களை ஞானிகளாக்கி கொண்டும், மனித சமுதாயம் ஞான மார்க்கத்தில் ஈடுபட தெளிவான வழிகளையும் உபதேசித்திருக்கிறார்கள்.

''தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையை பிடித்து பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனருளாலே'' என்கிறது திருமூலம்.

சித்தர்களிடமிருந்து பலதரப்பட்ட கலைகள் இந்த மனித சமுதாயத்திற்கு பெறப்பட்டுள்ளன. வழிபாட்டு முறை, இயற்கை அமைப்பின் ரகசியம், பிறவி ரகசியம். மனத்தின் தன்மை, மனித உடலில் உள்ள வல்லமைகள், ஆறு ஆதாரங்கள் எட்டு யோகங்கள். எட்டு வகையான சித்திகள் போன்ற பல்வகை ஞானங்களும் சித்தர் பாடல்களில் கிடைக்கப் பெறுகின்றன. இறை ஞானம் பெற ஈடுபாட்டில் உள்ளவன் பக்தன். இறை ஞானம் முழுதும் பெற்று தெளிந்தவன் சித்தன். இடைக்காட்டு சித்தர் நவக்கோள்களையும் மாற்றி அமைத்ததாக வரலாறு இருக்கிறது. வாழும் காலம் வளமாக அமைவதற்கும் இனி பிறவாமை வேண்டின் அதன் வழிமுறைகளையும் சித்தர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. மனதை கட்டுப்படுத்துவது சாதாரண காரியமில்லை. முயற்சியால் இது முடியும் என்கிறது சித்த யோகம்.

''பூட்டைத் திறப்பதும் கையாலே மனப்
பூட்டைத் திறப்பது மெய்யாலே
வீட்டைத் திறக்க முடியாமல் விட்ட
விதி இது என்கிறார் ஞானப் பெண்ணே''.

மனப் பூட்டைத் திறப்பதற்கும், பேரின்ப வீட்டைத் திறப்பதற்கும் வழி தெரியாமல் விதி மீது பழிபோடும் மனித சமுதாயத்தை சாடியும் பாடியிருக்கிறார் ஒரு சித்தர்.

சித்தர்கள் உருவத்தை எள்ளி நகையாடிய சமுதாயத்தைக் கண்டு ஒரு சித்தர் இப்படி பாடியிருக்கிறார்,

சித்தர் என்றும் சிறியர் என்றும் அறியொணாத சீவர்காள்
சித்தர் இங்கு இருந்தபோது பித்தர் என்று எண்ணுவீர்
சித்தர் இங்கு இருந்தும் என்ன பித்தன் நாட்டிருப்பரே:
அத்தன் நாடும் இந்த நாடும் அவர்களுக்கு எலாம் ஒன்றே

திரு. நஜன் அவர்களது இடைவிடாத முயற்சியால் பல அரிய விஷயங்கள் இந்த சமுதாயத்திற்கு பலன் தரத் தக்க விதத்தில் புத்தகமாக வெளிவந்திருக்கின்றன. ஆன்மீக வகையில் பலதரப்பட்ட பயனுள்ள பொக்கிஷங்களை தந்திருக்கிறார். தனது வாழ்க்கையை இந்த நற்பணிக்காகவே முழுவதுமாக பயன்படுத்தியவர். ''கற்றதனால் ஆயபயன் என்கொல்! வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்'' என்பதற்கு ஏற்ப வாழ்ந்தும், வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும் தெய்வத்திடம் சேர்வர் என்பதற்கு எடுத்துக்காட்டாக திகழ்ந்தவர் திரு. நஜன் அவர்கள். அவருடைய ஆன்மீகப் பணி, தனி மனித உழைப்பு இவற்றால் ஆன்மீக ஈடுபாடு உள்ளவர் பெரும் பயன் பெற்றனர்.

கடவுள் மனிதனுக்கு சொன்னது—பகவத் கீதை.
மனிதன் கடவுளுக்கு சொன்னது—திருவாசகம்.
மனிதன் மனிதனுக்கு சொன்னது—திருக்குறள்.

ஞானபாஸ்கர சித்தர், சித்தர்களை பற்றி சொன்னது— சித்தர்கள் காட்டிய யோக நெறி.

திரு. நஜனுடைய ஏட்டுப் பிரதிகள் இன்னும் பல நூல் வடிவம் பெற வேண்டி உள்ளது. அத்துணையும் விரைவில் வெளியாக அவர்தம் துணைவியார் மற்றும் குடும்பத்தினர் முயற்சி ஈடேற எல்லாம் வல்ல அன்னையை பிரார்த்திக்கிறேன்,


ஸ்ரீ வித்யா உபாசகர்
ஆன்மீக ஜோதிட மருத்துவர்
**ரசமணி கிருஷ்ணன்**

45, அக்ரகாரம் தெருவு
சிந்தாதிரிபேட்டை
சென்னை-600 002.
1st, May, 1994.


---

# பதிப்பாசிரியர் நன்றி

இந்த சித்தர்கள் காட்டிய யோக நெறி 106-வது புத்தகம். சித்தர்கள் எல்லாம் வாலை (பாலா)க் குமரியையே பூஜித்து சித்தியடைந்தவர்கள்.

இந்தப் புத்தகத்திற்கு ஸ்ரீமுகம் அருளி எங்களை ஆசீர்வதித்த காமகோடி பெரியவர்கள் அவர்களுக்கு எங்களது நமஸ்காரம்.

குறித்த நேரத்தில் முகவுரை எழுதி அனுப்பிய திரு. ரசமணி கிருஷ்ணன் அவர்களுக்கு எங்கள் நன்றி.

அட்டைப் படத்தை உருவாக்கித் தந்த ஸ்ரீ சுபா அவர்களுக்கும், இந்த நூலை அச்சிட்டுத் தந்த சிந்தாமணி அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி.

**என். லலிதாம்பாள்**



திருமலை—திருப்பதி ஸ்ரீ வேங்கடாசலபதி தேவஸ்தான்
நிர்வாகத்தினரிடமிருந்து உதவி பெற்று
**சித்தர்கள் காட்டிய யோகநெறி**
என்ற இந்நூல் வெளியிடப்படுகிறது.
தேவஸ்தான நிர்வாகத்திற்கு
எங்கள் உளம் கனிந்த நன்றி.

**பிரதிபா பிரசுரம்**
சென்னை-600 004.

THIS BOOK IS PRINTED WITH THE FINANCIAL
ASSISTANCE OF
THE THIRUMALA THIRUPATHI DEVASTHANAMS
THIRUPTHI, UNDER THEIR SCHEME
AID TO PUBLISH RELIGIOUS BOOKS

# ஆசிரியரின் முகவுரை

சித்தர்கள் நம் அறிவுக்கும் எட்டாத சக்தியுடைய மகான்கள்.

''உருவா முடலினை அழியா வகையில் நிறுவியப் பெரியோர்கள்'' அவர்கள் உடலதை யொளிக்கச் செய்யவும், சாவா மருந்துண்டு திடகாத்திரத்துடன் ஞான முக்தி அடையவும் (ரசவாதம்), வைத்தியம் (பிணியகற்றல்), ஞானம் (ஆன்ம அறிவை வளர்த்தல்), யோகம் (பரம்பொருளோடு ஒன்றுபடுதல்) என நான்கு முறைகளைக் கையாண்டனர். வேத ஆகமங்களில் உட்பொதிந்து மறைந்து கிடக்கும் பல அரிய பொருள்களை சித்தர்கள் தங்கள் சாதனங்களாலான திறவுகோலால் வெளிப்படுத்தினர் எனலாம்,

கல்லிலே கடவுளில்லை என்று சிவவாக்கியர் சொல்வதாகக் கருதுவது தவறு. எங்கும் உள்ள ஈசனைக் கல்லில் இல்லை என்று சொல்ல முடியுமா? மேலும் கல்லில் உள்ளான் என்பதற்கு பிரகலாதனும் மார்க்கண்டேயனுமே சிறந்த சான்றுகளாம். ஈதல், மறுபிறப்பு ஆகியவை பற்றி அவருடைய கருத்துக்கள் சிந்தனைக்குரியவை ''ஆர்க்கும் இடுமின் அவர் இவர் என்னன்மின்'' என்று திருமூலர் ஆகியோர் கூற ''ஐம்புலனை வென்றிடாது அவத்தமே உழன்றிடும் வம்பருக்கு ஈவதும் கொடுப்பதும் அவந்தமே'' என்று சிவவாக்கியர் உறுகிறார். நமது ஈதல் பிறரிடம் சோம்பேறித்தனத்தை வளர்க்கக் கூடாது என்பது கருத்து. ஐம்பூதங்களால் ஆக்கப்பட்ட நம்முடல் இறந்த பின் மண்ணின் பகுதி மண்ணுடனும், காற்றின் பகுதி காற்றுடனும் இவ்வாறுகக் கலந்து விடுகின்றன. ஆகவே மீண்டும் பிறப்பது இயலாது என்கிறார். ''கறந்த பால் முலை புகாது, கடைந்த வெண்ணெய் மோர் புகாது, உடைந்து போன சங்கின் ஓசை உயிர்களும் உடற் புகா, விரிந்த பூ உதிர்ந்த காயும் மீண்டு போய் மரப் புகா, இறந்தவர் பிறப்பதில்லை இல்லை இல்லை இல்லையே'. ஆனால் இந்தத் தத்துவத்தைப் பற்றி இவரைத் தவிர வேறு எந்த சித்தரும் பேசவில்லை,

சாகா நெறியே சித்தர்கள் நெறி. இவ்வுடம்பு மெய்யே என்பது அவர்கள் கருத்து. ''நிலமிசை நீடுவாழ்வார்'' என்றும், ''கூற்றம் குதித்தலும் கைகூடும்'' என்றும் திருவள்ளுவர் கூறியிருப்பதை இங்கு நாம் நினைவுகூர வேண்டும். மரணமிலாப் பெருவாழ்வுக்கு சிவவாக்கியர் கூறும் வழியைப் பாருங்கள்: ''மந்திரங்களாவது மதித்தெழுந்த வாயுவை, மந்திரத்தை உண்டவர்க்கு மயக்கம் ஏதும் இல்லையே.''

இவர்களைப் பற்றிய விவரங்களும் இவர்கள் கூறியுள்ள விஷயங்கள் பற்றியும் விவரமாக இந்நூலில் காணலாம்.

''நஜன்''

(எஸ். நடராஜன்)

# சமர்ப்பணம்



ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி ஸ்வாமிகள் பிருந்தாவனம்

ஜய வருஷம் வைகாசி மாதம் அனுராதா நட்சத்திரத்தில் தோன்றி நம்முடன் நடமாடும் தெய்வமாக 100 ஆண்டு காலம் வாழ்ந்த மகா புருஷர். ஸ்ரீமுக வருஷம், மார்கழி மாதம் அனுராதா நட்சத்திரம் கிருஷ்ண பட்ச துவாதசி அன்று சித்தியடைந்தார்.

ஸ்தூல உடம்பிலும் சூக்ஷ்ம உடம்பிலும் என்றென்றும் நமக்கு அனுக்கிரகம் செய்துகொண்டே இருப்பார்.

25—5—94. பிரதிபா பிரசுரத்தினர்

# குரு பக்தி மகிமை

## (காஞ்சி காமகோடி பெரியவர்கள்)

''குருவே தெய்வம் — பிரும்மா, விஷ்ணு, மகேஸ்வரன், தேவர்கள், சாக்ஷாத் பரப்பிரும்மம். இது முற்றிலும் உண்மை. ஸ்தோத்திரத்திற்காக சொல்லப்பட்டதில்லை. குருவை உள்ளன்போடு பூஜித்தால் சிவ விஷ்ணு பேதமில்லாமல் எல்லோரையும் பூஜித்ததாகிறது

சுகமும் துக்கமும் கலந்தே வாழ்வு பூராவும் இருக்கும். இரண்டிலும் மனம் தளராமல் சமநிலை அடைய முயற்சிக்க வேண்டும் இதுவே வாழ்வின் லட்சியம். இறைவன் இத்தன்மை வாய்ந்தவர். இந்த சமநிலையை நாம் வாழ்விலே அடைந்து விட்டால் அதுவே நாம் ஈசனின் அருள் பெற்றதாக ஆகும். இந்த சமநிலையை அடைய நாம் ஈசனை நாட வேண்டும்.

ஈசன் நம் கண்களுக்குப் புலப்படமாட்டார். பார்க்க முடியாதவரை தியானம் செய்வது கஷ்டம். சங்கு, சக்கரம், பீதாம்பரத்துடன் உள்ள திருமாலை தியானம் செய்ய முற்பட்டால் சங்கை தியானிக்கும்போது சக்கரம் மறைந்து விடுகிறது. பாத கமலத்தை நினைத்தால் கருணைக் கண் நினைவுக்கு வருவதில்லை.

ஆதலால் சிவவிஷ்ணு ஸ்வரூபமாக விளங்கும் குருவைப் பூஜிப்பது வெகு சுலபம். சமநிலையடைந்து சாந்த ஸ்வரூபமாக விளங்கும் குருவை சதா தியானத்தினால் வழிபட்டால் அவரது அனுக்கிரதத்தினாலும் ஞானோபசத்தாலும் நமக்கு அந்த மனோநிலை ஏற்படும்.

ஈசனிடத்திலும், குருவினிடத்திலும் எல்லா மக்களுக்கும் நம்பிக்கையும் உள்ளன்பும் ஏற்பட நம்மாலான முயற்சிகள் செய்ய வேண்டும்.

## அத்வைதர்

எல்லாம் பிரம்மம்; எல்லாம் நான்: எல்லாம் வித்தை! ''சிவமாக்கி எனையாண்ட'', ''நீயலால் பிறது மற்றின்மை'', ''ஒன்று நீ அல்லை அன்றி ஒன்றில்லை'' இந்த வாக்கியங்கள் எல்லாம் அத்வைதத்தையே விளக்குகின்றன. சங்கரர் போற்றிடும் ஞான சம்பந்தர் குறிப்பிடும் ''ஈருயந் திசை தானாய் வேருய் உடனானன்'' என்பதும் அத்வைத தத்துவம்.

# சித்தர்கள் காட்டிய யோக நெறி

## தோற்றுவாய்

### யார் சித்தன்?

சித்தத்தை வென்றவன் சித்தன். அவருடைய அருளனுபவ நிலை சித்து அல்லது சித்தி. சித்தி என்றால் அடைதல். ''போன காரியம் சித்தியாச்சு'' என்று சொல்வதுண்டு.

பேரறிவு சித் எனப்படும். இதிலிருந்து வந்ததே சித்தன். பேரறிவைப் பெறுவது சித்து,

சிவபெருமானுக்கு சித்தன் என்று ஒரு பெயர் உண்டு. சம்பந்தர் பாடிய ஸ்தலம் ஒன்றின் பெயர் சித்தீஸ்வரம். கஞ்ச மலை சித்தர் கோவில். இறைவன் பெயர் சித்தீஸ்வரன்.

சித்து, மந்திரம், தந்திரம் இம்மூன்றின் பொருளையும் உணர வேண்டும்.

**சித்து:** யோகிகள் தன் ஆன்மீக வாழ்வில் பெறும் பேறு.

**மந்திரம்:** மனம் கட்டுப்பாட்டினால் பெறும் சக்தி.

**தந்திரம்:** கூர்மையான அறிவைப் பயன்படுத்திப் பெறும் சக்தி.

### சித்துக்கள் எவை?
### தாயுமானவர் விளக்கம்

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்
கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்
ஒரு சிங்கம் முதுகின்மேல் கொள்ளலாம்
கட்செவி எடுத்தாட்டலாம்
வெந்தழலின் ரதம் வைத்தைந்து லோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்
விண்ணவரை ஏவல் கொள்ளலாம்
சந்ததமும் இளமையோடிருக்கலாம்
மற்றொரு சரீரத்தினிலும் புகலாம்
ஜலம் மேல் நடக்கலாம் தணல் மேல் இருக்கலாம்
என்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமறிது
சத்தாகி என் சித்தமிசை குடிகொண்ட
வறிவான தெய்வமே தேஜோ மயானந்தமே

இதில் 11 வகையான செயற்கரிய செய்கைகள் கூறப் பட்டுள்ளன.

தாயுமானவர் 'சித்தர் கணம்' என்னும் பகுதியில் சித்தர் களின் சித்துக்களைப் பல வகையாகப் போற்றி தன் முன் வர வேண்டும் என்று வேண்டுகிறார்.

திக்கோடு திகந்தமும் மனவேக மன்னவே
சென்றோடி யாடி வருவீர்
செம்பொன் மக மேரு வோடு
குண மேரு வென்னவே
திகழ் துருவம் அளவளாவி
உக்ரமிகு சக்ரதர னென்ன
நிற்பீர் கையில்
உழுந்தமிழும் ஆசனமா
வோரேழு கடலையும் பருக வல்லீர்
இந்திரன் உலகும் ஐராவதமும்
கைக்கெளிய பந்தாயெடுத்து விளையாடுவீர்
ககன வட்டத்தை எல்லாம் கடுகிடை இருத்தியே
அஷ்டகுல வெற்பையும் காட்டுவீர் மேலும் மேலும்
மிக்க சித்திகள் எல்லாம் வல்ல நீரடிமை முன்
விளங்க வரு சித்தி இலவோ
பாட்டளி துதைத்து வளர் கற்பகநல் நிழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி இரு பாரிசத்திலும்
பணி செய்யும் தொழிலாளர் போல்
கேட்டது கொடுத்து வர நிற்க வைப்பீர் பிச்சை கேட்டுப்
பிழைப்போரையும் கிரீடபதி யாக்குவீர்
கற்பரந்த வெள்ளமொரு கேணியிடை குறுக வைப்பீர்
ஓட்டினை எடுத்தாயிரட்டு மாற்றாக
ஒளியிடும் பெண்ணாக்குவீர்
உரகனும் இளைப்பாற யோக தண்டத்திலே
உலக சுமையாக வருளால்
மீட்டிடவும் வல்லநீர் என் மனக் கல்லையனல்
மெழுகாக்கி வைப்பதரிதோ
பாரோடு நன்னீராதி யொன்றோ டொன்றாகவே
பற்றி லய மாகும் போது பரவெளியின் மருவுவீர்
கற்பாந்த வெள்ளம் பரந்திடி னதற்கு மீதே
நீரிலுறை வண்டாய்த் துவண்டு சிவயோக நிலை நிற்பீர்
விகற்பமாகி

நெடிய முகிலேழும் பரந்து வருடிக்கிலோர்
நிலவுமதி மண்டல மீதே
ஊரென விளங்குவீர் பிரமாதி முடிவில்
இடைஊர் தியருளாலுலவுவீர்
உலகங்கள் கீழ் மேல் வாகப் பெருங்காற்றுலாவின்
நல் தாரணை யினுல்
மேருவென அசையாமல் நிற்க வல்லீர்
மதுமே தக்க சித்தி எளிதோ

## திருவிளையாடல் புராணத்தில்

பரஞ்சோதி முனிவர் தன் திருவிளையாடல் புராணத்தில் பல அரிய சித்திகளைக் குறிக்கின்ருர்.

எல்லாம்வல்ல சித்தபடைப் படலம், அஷ்டமா சித்து உபதேசித்த படலம், கல்லானைக்கு கரும்பருந்திய படலம் முதலிய பகுதிகளில் அவற்றைக் காணலாம்.

சண்ட வெம் பணிப்பகை யெனப்
பறந்து விண்டாவிக்
கொண்டலைப் பிடித்திடி யொடுங்
குடித்த நீர் பிழிந்து
கண்ட வர்க்கதிசயம் பெறக் காட்டியும்
காண விண்டலத்தினில்
பண்டு போலிறைக் கோள விடுத்தும்

என்ற 5 பாடல்கள் எல்லாம் வல்ல சித்தரான படலத்தில் உள்ளன, இதில் பல அரிய சித்துக்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

பாம்பாட்டி சித்தர் தன் பாடல்களில் சுமார் 25 சித்துக்களைக் குறிப்பிடுகிருர்.

நாகங்களைக் கையில் எடுத்து ஆட்டுவது, இந்திரன் உலகை இங்கே காட்டுவது, தூணைச் சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வது, துரும்பை பெரும் தூணுகக் காட்டுவது, ஆணைப் பெண்ணுகவும், பெண்ணை ஆணுகவும் ஆக்குவது, மலைகளைப் பந்தாடுவது ஏழுகடல்களையும் குடித்து ஏப்பமிடுவது மண்டலங்களை கையினுல் மறைப்பது வானத்தை வில்லாக வளைப்பது அக்னியில் மூழ்கி வருவது நீருள் மூச்சடக்கி இருப்பது வன் புலியை தாக்குவது செம் பொன் ஆக்கும் ரஸவாதம் 64 கலைகளையும் அறிவது பற்றில்லா மனதைப் பெற்றிருப்பது.

ராமலிங்க சுவாமிகள் தன் அருட்பாவில் குறிப்பிடுவதாவது :

கல்லையும் உருக்கலாம் நாருரித்திட
கனித்த கனியாகச் செய்யலாம் அமுதாக்கலாம்
கடுவிடமு முண்ணலாம்
கொடும் கரடி புலி சிங்கம் முதலா
வெல்லு மிருகங்களையும் வசமாக்கலாம் அன்றி
வித்தையும் கற்பிக்கலாம் மணலை
சேய வெற்பினை யணியதாய் செய்து மற்றணித்தாய்
மேய வெற்பினை சேயதா விடுத்து மெய்முதுமுட
பாய மக்களை யிளைய வராக்கியும் குதலை
வாய மக்களைக் கழிமுது
மக்களா வகுத்தும்
ஆணை பெண்ணுருவாக்கியும்
பெண்ணை ஆணுருவா
மாணக் காட்டியும் மலடியை
மகப்பெறச் செய்தும்
கோணற் கூன் செவி ஊமை கண்
குருடு பங்கெவரும்
காணத் தீர்ந்து நாலு லோகமும்
கனமாச் செய்தும் வீசி மாத்திரைக்
கோலினை விண்ணிட்டதன் மேல்
ஊசி நாட்டிட்டூசியேல் பெருவிர லூன்றி
ஆசிலாடியுமூசி மேற்றலை கிழக்காக
மாசில் சேவடி போலாவான்
மலர்ந்திடக்கழன்றும் மேவுதேர் வடமாக்கலாம்
இல்லை யொரு தெய்வம் வேறில்லை எம்பாலின்பம்
ஈகின்ற பெண்கள் குறியே
எங்கள் குல தெய்வமெனு மூடரை தேற்ற வெனில்
எத்துணையும் அரிதரிது காண் வல்லைய வருணர் வற
மருந்தருள்க தவசிகாமணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேலூரில் அன்பர் வரோகமற
வளர் வயித்த நாதனே !

சித்து இரண்டு வழிகளில் அடையக் கூடும் ஒன்று பக்தி மார்க்கம் ஒன்று யோகமார்க்கம்.

# சித்தர்கள் கண்ட யோக நெறி

# 1

விஞ்ஞானக் கண்டுப்பிடிப்புகள் எல்லாம் மேல் நாடுகளிலேயே நடைபெறுகிறது. இந் நாட்டில் அம்மாதிரி இல்லையே என்று குறைபடுபவர்கள் உண்டு இது உண்மையல்ல.

பண்டைய தமிழகத்து விஞ்ஞானிகள் (சித்தர்கள்) எவ்வளவோ புதுக் கண்டுபிடிப்புகளை உலகறியச் செய்திருக்கிறார்கள் இவர்களுடையக் கண்டு பிடிப்புக்கள் உலகை நாசமாக்கக் கூடியதல்ல மக்களை வாழவைக்கவே அவர்கள் தங்கள் நேரம் காலம், வாழ்க்கை முதலியவைகளைச் செலவிட்டனர் மனித சமுதாயத்தின் தொல்லைகளைப் போக்குவதற்காகவே அவர்கள் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்.

சித்தர்கள் மனதை ஒரு நிலைப்படுத்தி யோக நெறி நின்று இறை அருளைப் பெற்றவர்கள் காயசித்தி பெற்றவர்கள்.

சித்தி என்ற சொல்லுக்கு காரியம் வெற்றி நல் வாய்ப்பு என்ற அர்த்தம் உண்டு (போன காரியம் சித்தி பெற்றதா என்று கேட்பதைக் கவனித்திருக்கலாம்) சிவயோக சித்தியால் சிவானுபவம் பெற்றவர் சித்தர் சிவபெருமானுக்கே சித்தர் என்ற பெயரும் உண்டு.

திரு விளையாடற் புராணத்தில் சிவ பெருமான் எல்லாம் வல்ல சித்தராக திருவிளையாடல் புரிந்திருக்கிறார். அஷ்டமா சித்திகளை உபதேசித்திருக்கிறார்

சித்தி என்பதற்கு ஆன்மா இறைவனோடு இணையும் என்பது தான் சரியான அர்த்தம்.

சித் + தீ = அறிவையே ஒளியாக உடையவர்கள் சித்தர்கள் சித்து என்றால் இளமை, மருத்துவர்கள், அணுவையும் ஆராயும் ஆற்றல் உள்ளவர்கள் என்றும் பொருள்படும்.

சித்து என்றால் அற்புதங்களை நிகழ்த்துவது என்ற அர்த்தமும் உண்டு யோக மார்க்கத்தில் நின்று வெற்றி பெற்றவர்களை சித்தி பெற்றவர்கள் என்று கூறுவதுண்டு.

தேஜோமயத் தெய்வம் அவர்கள் சித்தமிசை குடிகொண்டுள்ளது. ஆகவே சித்தர்கள் எனப் பெயர் சாகாத மார்க்கமாகிய சன்மார்க்கத்தை விளக்க வந்தவர்கள்.

கடவுளைக் காண முயன்றவர்களை பக்தர்கள் என்றும் கண்டு தெளிந்தவர்களை சித்தர்கள் என்றும் தேவாரம் கூறு கிறது. அனுபூதி, ஞானம் பெற்றவர்கள் சித்தர்கள்.

வாசி என்ற மூச்சினை அடக்கி யோக சித்தியால் உடலில் உள்ள மூலாதாரம் நாபி, இதயம் இரைப்பையின் நடு. கழுத்து தலை உச்சி என்ற ஆறு இடங்களில் மனதை நிலைநிறுத்தி குண்டலினியை எழுப்பி மேலேறச் செய்து சித்தி பெற்ற வரே சித்தர் இவர்கள் காயசித்தி பெற்று சாவை வெல்ல முயன்று வெற்றி பெறுவதே 'வீடு' என்பர். இயம நியமாதி வழிகளில் ஒரு சிறிதும் தவறுது வாழ்ந்து உணவைக் குறைத்து நாடிகைகளைத் தூய்மையாக்குவதால் உடலிலுள்ள ஒவ்வோர் உயிர் அணுவும் தூய்மையாக்கி பின் மனன வழிபாட்டினுல் அணுவியக்கம்முற்றி ஒளிவடிவம் என்ற திவ்யவடிவம் வளர்ந்து வரும்போது மாறிமாறி வரும் சவிகற்ப நிலையும் பின்னர் நிலை யாக ஒளிரும் நிர்விகற்ப நிலையும் தோன்ற உடலினை ஞான ஒளி மயமாக்கி சாவினை வெல்வர்.

இவர்கள் யோக மார்க்கத்தை நாத மார்க்கம் என்பர்.

யோக ஞான மார்க்கங்களை பின்பற்றி அருள் பெற்றவர்கள் எல்லோருமே சித்தர்கள் என்ற கருத்து பிற்காலத்தில் ஏற்பட்டு விட்டது.

இவர்கள் நூல்களில் மந்திரம் தந்திரம் இவைகள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம் மனதின் திறம் பெற மந்திரம் அவசியம் என்றும் தன் நிலையில் உறுதியாக நிற்க தந்திரம் அவசியம் என்றும் சித்தர்கள் கருதியதால் இவைகளுக்கு அவர் கள் தங்கள் நூலில் முதலிடம் கொடுத்தார்கள்.

சித்தி என்பது ஆத்மாவை பற்றிய ஞானம் இயற்கையை சித்தருடையக் கைப்பொருளாகவும் சீடனுகவும் பணியாள ராகவும் ஒப்பிடலாம்.

இயற்கை மூன்று வகைப்பட்டது.

1) கண்ணுக்குப்புலப்படும் ஸ்தூல உலகம்.

2) கண்ணுக்கு புலப்படாத ஸூக்ஷ்மமான உலகம் இது ஸ்தூலத்திற்குள் நிறைந்தது ஸ்தூலத்திற்கு சக்தியைக் கொடுப் பது. ஸ்தூலம் போலவே உருவம் படைத்தது அதற்கு பிராணுதாரமாக உள்ளது.

3) இந்த இரண்டிற்கும் மேலானதும் சர்வசக்திக்கும் காரணமானதும் ஆதியந்தமில்லாததும் அழிவற்றதாகவுமுள்ள ஆத்மா.

ஆத்மாவின் ஸர்வக்ஞத்துவத்தையும் அனந்த சக்தியையும் அடையும் மார்க்கத்தை அறிவது அவற்றுல் ஸ்தூல தேகத்தி லிருக்கும்போதே இயற்கை உலகசக்திகளை அடக்கி உபயோகிக்க வல்ல ஞானம் பெறுவது. இவைகளே சித்தி இந்த ஞானத்தை உபயோகித்துக் காட்டுவதே வித்தை.

மாந்திரீகன், சூனிய வித்தை செய்பவர் அன்னியமான சக்திகளுக்குள் வசப்பட்ட செயலற்ற பேதை சித்தர் தமக்கு உள்ளம் புறமுமுள்ள சகல வேகங்களையும் சக்திகளையும் அடக்கியாளும் வல்லமையுடையவர்.

இறந்த காலத்தில் நடந்தவையும் நிகழ்காலத்தில் இருக் கின்றனவும் வருங்காலத்தில் உதிக்கப்போவதுமான எல்லா விஷயங்களும் ஆகாசத்தில் பதித்துள்ளன. ஆகாசத்தை (ASTRAL LIGHT) கண்ணுக்குப் புலப்படாததும் ஜகத்தின் மர்மமானதும் ஜகத்தில் நிகழும் எல்லாவிஷயங்களைக் கொண்ட ஒரு படத்திற்கு ஒப்பிடலாம் ஆத்ம வித்தையில் தேர்ச்சியடைந்த சித்தர் தாம் ஞான திருஷ்டியால் முக்காலத்தைப் பற்றியும் ஆகாசத்திலிருந்து அறியமுடியும்.

வேண்டும் போது ஸ்தூல சரீரத்திலிருந்து ஸூக்ஷ்ம சரீரத் தை முழு நினைவுடன் தானுகவே உருவிக் கொள்வதென்பது சித்திகளில் ஒன்ருகும்.

காந்த சக்தி வித்யுத் (மின்சார) சக்தி இந்த இரண்டின் சர்வ குணங்களையும் அவைகள் ஒன்றுக்குள்ளிருக்கிற ஸூக்ஷ்ம சம்பந்தத்தையும் அவைகளின் சக்திகளை அனுபவத்தில் நன்கறிந்த ஞானமே சித்திகளையடைய இன்றியமையாத வழி.

கடவுளைக் காண முயல்பவர்கள் பக்தர்கள் இறைவனைக் கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள் அகஸ்தியர் திருமூலர் தாயு மானவர் இவர்களெல்லாம் சித்தர்களே. இவர்கள் வழியில் வாழையடி வாழையாக வந்தவர் ராமலிங்க சுவாமிகள் வள்ள லார் சிஷ்யர் தொழுவூர் வேலாயுத முதலியார் சித்தர் என்னும் நின் அடியார் திருச் சபையில் நடு இருத்திச் சித்துருவின் வளர்க்கின்ருய் சிற்சபையில் நடிக்கின்ருய் என்கிருர்.

இறைவன் அருளால் இறைவனைக்காணும் அறிவைப் பெறுவது சித்து, இதைப் பெற்றவர் சித்தர் சித்தத்தை வென்றவன் சித்தன்.

திருமந்திரம் சித்தர்களுக்கு பின் வருமாறு விளக்கம் தருகிறது.

பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துறந்து
மதமற்றெனதியான் மாற்றி விட்டாங்கே
திதமுற்றவர்கள் சிவ சித்தர் தாமே

சாலோகம் (இறைவன் உலகில் இருக்கும் பேறு) சாமீபம் (இறைவன் அருகில் இருக்கும் பேறு) சாயுஜ்யம் (இறைவனோடு ஒன்றும் பேறு) இம்மூன்றும் பதமுக்தி எனப்படும். கடைசியான சாயுஜ்யத்தை அடைவதே சித்தி.

## சித்தர்களில் பல வகை

சித்தர்களில் பல வகையினர் உண்டு. ஆன்மானுபவம் பெற்று மனம் அடங்கி பிறருடன் தொடர்பற்று பித்தர் போல, பேயர் போல் இருப்பவர் ஒரு வகையினர்.

தாம் பெற்ற பேறு இவ்வையகம் பெற வேண்டும் என்ற கருணையால் தான் கண்ட அனுபவங்களை உலகினர்க்கு வெளியிடுபவர் மற்றொரு வகையினர்.

பிறரின் குறைகளை தாமே ஏற்று தன் ஆன்ம வலியால் அவர்களுக்கு நிவாரணம் அளிப்பவர் ஒரு வகையினர்.

இவர்களிடம் சாதி, குலம், பிறப்பு, இனம், ஆண், பெண் என்ற பேதம் இல்லை.

''பறைச்சி யாவதேதடா
பணத்தி யாவதேதடா''

என்று பரந்த மனம் படைத்தவர்கள் இவர்கள்.

## சித்த யோக நெறி

சித்தர் யோக நெறி உடல் அழியாத வகையில் அமைந்துள்ளது. அதற்கேற்ப முறைகளும் அமைந்துள்ளன. சிவத்தை அறியும் வரை த்வைதத்தையும் அறிந்த பிறகு அத்வைதத்தை இணைத்து ஒன்றாக்கினர்,

சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தா சுத்தத்துடன் தோய்ந்து தோயாதவர்
முத்தாம் முக்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத்தன்மையர் தாமே.

(திருமந்திரம்-2526)

சிவமாதல் வேதாந்த சித்தாந்தமாகும்
அவமாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்றானால்
நவமான வேதாந்த ஞான சித்தாந்தமே (2369)

சித்தாந்தத் தேசிவன் முத்தி சித்தித்தலாற்
சித்தாந்ததே நிற்போர் முத்தி சித்தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொருளாதற்
சித்தாந்த வேதாந்தங் காட்டும் சிவனையே. (2394)

சிவனை பரமனுட் சிவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்தமானுன்
நவமுற்ற வித்தையில் ஞானஞ்சிவமாந்
தவமிக்குணர்ந்தவர் தத்துவத்தாரே, (2395)

சித்த நெறி துவைதத்தையும் அத்வைதத்தையும் இணைத்த தாகும். இதை நன்ருக விளக்கியவர் திருமூலரே.

வேத நெறி மிகப் பழைமையானது. அதன் முடிவு தத்வமஸி. (நீ பிரும்மமாகின்ருய்) இந்த வேதாந்த நெறி சடத்திலிருந்து விலகி சித்துருவாகி சடலத்திலும் சித்திலும் விளங்கி பெறும் பேறே சித்த மார்க்கம். வேதாந்த நெறி சடத்திலிருந்து விலகி சித்து உருவாகி பிரும்மத்தில் லயமடைவது இதனுல் இந்த நெறி அறிவையும் வைராக்கியத்தையும் பெருக்குகிறது. இது உலகியல் ஆற்றல் வெள்ளத்தில் எதிர்நீச்சல் செய்வது போலாகும்.

சித்த நெறி உலகியலில் ஒத்து, அறிவும் அன்பும் பொருந்தி அன்பையே சக்தியாக மாற்றி அதன் வழி சிவத்துடன் பொருத்துவதாகும். உலக வாழ்க்கையையே சிவநெறியாக்கச் செய்வது. இது விஞ்ஞான கலா நெறி.

திருமூலர் வேதங்களை ஓதி, நிலையாமையை உணர்ந்து வேத நெறியை விட்டு ஆகம நெறிக்கு வந்து உயிரை உடலில் நிலை பெறும் உபாயத்தைக் கண்டவர். திருமூலர் 'தத்வமஸி' மகா வாக்கியத்தை உறுதிப்படுத்தியுள்ளார். சீவனே சிவனை அறிந்த பிறகு சிவம் என்கிருர். அதை அறியாதபோது பசுவாக இருந்தது என்கிருர்,

சீவனெனச் சிவனென்ன வேறில்லை
சீவனர் சிவனரை யறிகிலர்
சீவனர் சிவனரை அறிந்தபின்
சீவனர் சிவனயிட் டிருப்பாரே. (2017)

ஆகமங்கள், ஆன்மா பிரகிருதி சம்பந்தந்தப்பட்ட 36 தத்துவங்களை விட்டபோது 'பரம்' என்றும் விடாது தத்துவங்களுடன் கலந்திருந்தபோது அதற்கு ஆன்மா என்றும் பெயரிட்டுள்ளன,

தத்துவ பாஷையில் ஆன்ம சமஷ்டியே சிவ நிலை. அதன் வியஷ்டியே ஜீவனும், பிரபஞ்சமும். சமஷ்டியையும் வியஷ்டியையும் இணைக்கும் நிலைக்கே பிரணவம் என்று பெயர். (சாதாக்கியம் என்றும் கூறுவர்) இந்த பிரணவத்தை அனுபவத்தில் உணர்ந்தால் அதுவே வேதம் கண்ட நெறியாகும்.

பெருநெறியான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரைகூடி நால்வேதத்
திருநெறியான கிரியை யிருந்து
சொரூப மதானேர்த்துகளில் பார்ப்பாரே. (227)

இப் பிரணவம் உணர்வினாலும் ஒலியாலும் ஒளியாலும் (விந்து நாதங்களால்) அறியத் தக்கது. இது நிராதார யோகம். இதுவே நாத உபாசனை.

## நாதமும் விந்துவும்

நாதம் விந்து பற்றி நன்கு ஆராய்ச்சி செய்தவர்கள் சித்தர்களே. மறு ஜன்மம் எடுக்காமல் இருக்க வழி தேடியே அவர்கள் இந்த ஆராய்ச்சியில் இறங்கினர்.

நாதம் என்பது ஜீவன்களிடம் ஏற்படும் மூல சப்தமே. இதையே ஜீவாத்மா என்கிறோம் இந்த நாதமே மறு பிறப்பிற்குக் காரணமான பரந்த சக்தி எனப்படுகிறது. மனிதன் இறக்கும்போது இந்த நாதம் வெளிப்பட்டு விடுகிறது.

விந்து அவரவர் செய்த கர்மத்திற்கு தக்கவாறு மாறும். இதன் மூலமே கரு தரிக்கிறது. ஆனால் நாதத்தின் தூண்டுதல் இன்றி கரு தரிக்க முடியாது.

நாதம் பரந்த சக்தியாகக் காற்றோடு கலந்துள்ளது. விந்து ஒரு உடலில் அடைபட்டிருக்கிறது.

மனிதன் சன்யாச ஆசிரமத்தில் கர்மங்களை நிறுத்திவிடுகிறான். கண்ணால் பார்ப்பது, காதால் கேட்பது, மூக்கால் மூக்சு விடுவது, வாயால் உண்பது பாக்கி நிற்கிறது. இவைகளிலிருந்தும் விடுதலையடைய கண்களை மூடிக் கொள்கிறான். மூக்கால் ஸ்வாசம் விடுவதை சுவாச பந்தனம் செய்து மூச்சு விடுவதைக் குறைத்துக் கொள்கிறான். உணவைச் சுருக்கி ஜீவன் இருக்கும் அளவுக்கு சரி செய்கிறான். காதால் கேட்கும் சத்தத்தைக் கேட்காமல் இருக்க மனதை ஒருநிலைப் படுத்துகிறான்.

ஜீவனை நாதத்தில் லயப்படுத்தும்போது வெளி சப்தம்

கேட்காது. இதனுல் நாதம் ஜீவனிடமிருந்து பிரிந்து பரிசுத்த மாகி மேல் எழும்புகிறது, இதுவே தபோ நிலை.

சித்தர்கள் ''ரசேஸ்வர தர்சனம்'' என்னும் சைவப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது. சித்தர்களில் ஒருவரான கோரக்நாதர் எழுதிய ''கோரக்ஷ ஸம்ஹா'' ரசேஸ் வர தர்சனத்தை விளக்குகிறது. சிவபெருமானுடன் ஐக்யப் பட்டிருப்பதே ரசேஸ்வர தர்சன மோக்ஷ நிலை.

## சித்தர்களின் ஆற்றல்

சித்தர்களின் ஆற்றல் பற்றி பாம்பாட்டிச் சித்தர் பாடுவ தாவது :

எட்டு நாகந்தன்னை கையில் எடுத்தாட்டுவோம்
இந்திரனுருலகத்தை இங்கே காட்டுவோம்
கட்டுக் கடங்காத பாம்பைக் கட்டி விடுவோம்
கடுவிஷந்தன்னை கக்கி ஆடுபாம்பே
ஆதிசேஷனுகிலுமெம் அங்கையினுலே
ஆட்டி விடுவோ மெக்களாக் கிணைக் குள்ளே
நீதியோடடங்கியே நின்றிடச் செய்வோம்
நின்ற நிலை தவருமல் ஆடுபாம்பே
எட்டுமலைகளைப் பந்தா யெடுத்தெடுத் தெறிந்திடுவோம்
ஏழு கடலையும் குடித்து ஏப்பமிடுவோம்
மண்டலம் முற்றுக்கையால் மறைத்திடுவோம்
மூண்டெரியு மக்னிக்குள் மூழ்கி வருவோம்
முந்நீருள் இருப்பினும் மூச்சடங்குவோம்
தாண்டிவரும் வன்புலியை தாக்கி விடுவோம்
தார்வேந்தன் முன் நின்ருடு பாம்பே,

சித்தர் கணத்தின் ஆற்றல் பற்றி தாயுமானவர் (சித்தர் கணம் அத்யாயத்தில்) பாடிய பாட்டாவது :

திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்ரேடி ஆடி வருவீர்
செம்பொன் மக மேருவொடு குணமேரு
வென்னவே திகழ் துருவமளவளாவ
உக்ரமிகு சக்ரதரன் என்ன நிற்பீர் கையில்
உழுந்தமிழும் ஆசனமா
வாரேழு கடலையும் பருக வல்லீர் இந்திரன்
உலகமும் அயிராவதமுமே

கைக்கெளிய பந்தா வெடுத்து விளையாடுவீர்
    ககன வட்டத்தையெல்லாம்
கடுகிடை இருத்தியே அட்டகுல வெற்பையும்
    காட்டுவீர் மேலும் மேலும்
மிக்க சித்திகளெல்லாம் வல்லநீர் அடிமைமுன்
    விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரஸ நன்னிலைபெற்ற
    வித்தகர் சித்த கணமே,

மறை முடிவும் முறை முடிவும் ஆகிய வேதாந்த சித்தாந்த சமரஸம் என்னும் வேறுபாடில்லாத நல்ல நிலைபெற்ற மூதறிவாம் மெய்யுணர்வினையுடைய சித்தர்கள் என விளக்கம் தருகிறார்.

எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
யாதினும் அரிதரிது காண்
இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ
எது வருமோ அறிகிலேன்
கண்ணகல் நிலத்து நான் உள்ளபொழுதே அருட்
    ககன வட்டத்தில் நின்று காலூன்றி
    நின்று பொழி யானந்த முகிலொடு
    கலந்து மதி யவசமுறவே
பண்ணுவது நன்மை இந்நிலை பதியு மட்டமே
    பதியாயிருந்த தேகப் புவரி குலையாமலே
    கௌரி குண்டலியாயி பண்ணவிதன் அருளினாலே
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
    வேண்டுவே னுமதடிமை நான்
    வேதாந்த சித்தாந்த சமரஸ நன்னிலை பெற்ற
    வித்தகர் சித்தர் கணமே

## சாமு சித்தர்

மூன் பிறவியில் சரியை கிரியை யோகம் செய்து மனத் தூய்மையுடன் வாழ்ந்து மீண்டும் பிறக்கும் போதும் அத்தூய உள்ளத்துடன் பிறந்து இறைவனை வழிபடுபவர்கள் 'ஸம்சித்தம் என்றால் நன்றாக முடிவு பெற்றது என்று பொருள்.

## வைநயிகர்

ஒழுக்கம், வழிபாடு ஆகிய நல் இயல்பு உடையவர்கள். விநயம் என்ற அடிப்படையிலிருந்து வந்த சொல். ஞான நூல்களை ஓதுபவர்.

## பிராகிருதர்

*பிரகிருதி (உலகம்) நெறிகளில் உழன்று அறிவில்லாதவர் களாகத் திரிபவர். அறிவு நூல்களில் ஆர்வமோ அறிவோ இல்லாதவர்.*

*இம்மூவரில் வைநயிகர் என்பவர்களுக்காகவே தன் நூலை எழுதியதாக அருள்நந்தி சிவம் கூறுகிறார்.*

*பண்டை நற்றவத்தால் தோன்றி*
*பரமனை பக்தி பண்ணுந்*
*தொண்டரைத்தானே தூய கதியினிற்*
*றெருகுப்பன்; மார்க்கர்*
*கண்ட நூலோதி வீடு காதலிப்பவர்கட்கு ஈசன்*
*புண்டரிகத்தாள் சேரும் பரிசினை புகலலுற்றேம்.*

*—சிவஞான சித்தியார்*

## சித்தர் சாகஸம்

*சித்தர்கள் சாதாரண வழிபாட்டு முறைகளில் நம்பிக்கை இல்லாதவர்கள். சித்து விளையாடல்கள் செய்பவர்கள்.*

*சிவவாக்கியர் மதி மயக்கத்திற்கு எளிதில் இடம் கொடுப பதில்லை. பத்திரகிரியார் மதி வலிமையுடன் ஆனந்தக் கனவும் காண்பவர். பாம்பாட்டிச் சித்தர் படாடோபமான சித்தி களுக்கிடையே பக்திக் கண்ணுலும் பார்ப்பவர். இடைக் காட்டுச் சித்தர் வெள்ளைச் சொற்களில் கொள்ளையாகப் பொரு ளைப் புதைத்து விடுவார். கடுவெளிச் சித்தரின் உவமக் கதை பண்டிதரையும் கடுமையாகப் பரீட்சிக்கும். இவைகளைப் பார்ப்போம்.*

## சிவவாக்கியர்

### பண்ணும் பூஜை பயன்படுமோ

*பண்டு நான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை?*
*மீளவும் சிவாலயங்கள் சூழ வந்ததெத்தனை ?*

### ஞானப் புலியும் பிடிபடுமோ ?

*ஆடுகாட்டி வேங்கையை அகப்படுத்துமாறு போல்*
*மாடுகாட்டி என்னை நீ மதிமயக்கலாகுமோ?*
*(மாடு-செல்வம்)*

### பத்திரகிரியார்
### காட்சி வேண்டும் புலனுட்சி வேண்டும்

கடத்துகின்ற தோணிதனைக்
கழைகள் குத்திவிட்டாற்போல்
நடத்துகின்ற வாழ்வுதன்னை
நான் அறிவதெக்காலம்?
மனதை ஒரு வில்லாக்கி
மதி வலியை நாணுக்கி
என தொழியை அம்பாக்கி
எய்வதினி எக்காலம்?
அருவி மலை நடுவே
ஆயிரங்கால் மண்டபத்தே
திருவிளையாடல் கண்டு
தரிசிப்பதெக்காலம்?

### பாம்பாட்டி சித்தர்
### மனப் பாம்பை ஆட்டி அடக்க வேண்டும்

மலைதனைப் பந்தாய் எடுத்தெறிவோம்
இடையூறுகள் மலைமலையாக வந்தால்தான் என்ன?
அக்னிக்குள் மூழ்கி வருவோம் தியாக நெருப்பு
மூழ்குவோரை மாசு போக்கி தங்கமாக்கும்

### வெம்புலியை வெல்வோம்

தாண்டி வரும் வெம்புலியைத் தாக்கிவிடுவோம்
இந்திரனுர் உலகத்தை இங்கே காட்டுவோம்
செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
என்ற கதையை நம்பமாட்டோம்
வீடுபெறும் கடவுளை எங்களுடன்
விளையாடச் செய்வோம் என்ருடு பாம்பே!

### சினத்தை வெல்லும் மாட்சி

மனம் எனும் குதிரையை வாகனமாக்கி
மதிஎனும் கடிவாளம் வாயில் பூட்டி
சினம் எனும் சீனிமேல் சீராய் ஏறி
சவாரி விட்டோம் என்ருடுபாம்பே.
கோபம் என்னும் மதயானை கொண்ட மனதை
கூர் கொள் புத்தி அங்குசத்தால் அடக்கி விட்டோம்

### ஞான வெளியில் ஞான ஒளி

தூக்கிய பாதம் கண்டோம் ஜோதி கண்டோம்
சுத்த வெளிக்குள்ளே ஒரு கூத்தும் கண்டோம்

**இடைக்காட்டு சித்தர்**

*ஆடு காண் போகுதே கங்கையில் ஆடு*
*சேதுவைக் காண் பாவம் போகுதே.*

**தற்காப்பு**

*ஆட்டுக் கூட்டங்களை அண்டும் புலிகளை*
*ஓட்டியே ஊது குழல் கோனே*
*ஓட்டியே ஊதுகுழல்*

**கடுவெளி சித்தர்**

**வாழ்க்கையில் நிதானமாக ஆடு**

*நந்தவனத்திலோர் ஆண்டி அவன்*
*நாலாறு மாதமாய் குயவனை வேண்டிக்*
*கொண்டுவந்தான் ஒரு தோண்டி மெத்திக்*
*கூத்தாடி கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி.*

*கடுவெளிச் சித்தர் பாடுகிறார் :—*

*''எங்கோ ஒரு நந்தவனம் இருந்தது. அங்கே ஒரு ஆண்டி இருந்தான்!'' என்று ஒரு கதை சொல்வது போல் ஆரம்பிக்கிறார் கடுவெளிச் சித்தர்.*

*நந்தவனத்தில் குடியிருக்க அந்த ஆண்டி என்ன செய்தான்?*

*நந்தவனத்தில் ஓர் ஆண்டி—அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி*

*நாலாறு மாதம் என்றால் நாலும் ஆறும் சேர்ந்து பத்து மாதம்!*

*நந்தவனத்தில் இருக்கிற அந்த ஆண்டிப் பரதேசியானவன், பத்து மாதமாக 'ஆர்டர்' கொடுத்துக் காத்திருந்தான்! யாரிடம்? குயவனிடம்!*

*பாண்டங்கள் செய்கிற தொழிலாளியான குயவனிடம்? தனக்கு ஒரு பாத்திரம் வேண்டும் என்று வேண்டி, அந்த விண்ணப்பம் நிறைவேறுவதற்காகப் பத்து மாதங்கள் பொறுத் திருந்தான்.*

*தோண்டி என்றால் மண் பானை, பாத்திரம்! மண்ணால் ஆன குடம் என்று சொல்வதும் பொருந்தும்.*

*குயவனிடம் சொல்லி அந்தத் தோண்டி தயாராவதற்குப் பத்து மாதம் பிடித்தது!*

சித்தர் சொல்கிறார் :

நந்தவனத்தில் ஓர் ஆண்டி — அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக் கொண்டு வந்தான் ஒரு தோண்டி! பத்து மாதங்கள் ஆயின, அந்தத் தோண்டியைக் குயவன் செய்து கொடுப்பதற்கு!

குயவனிடமிருந்து குடத்தை வாங்கி வந்தான் அந்த ஆண்டி!

கதையின் உருவகத்தை இப்போது பார்க்கலாம்.

ஆண்டி என்பது உயிர். தோண்டி அல்லது குடம் என்பது இந்த மனித சரீரம்.

குடத்துக்குள்ளே தண்ணீர் நிரம்பியிருப்பது போல இந்த உடலுக்குள் உயிரானது ஒவ்வொரு பகுதியிலும் நிரம்பி நிற்கிறது!

குயவன் யார்? இந்த அண்ட பிண்ட சராசரம் அனைத்தையும் உருவாக்குகிற படைப்பு ஆற்றல்! அந்த ஆற்றலை 'அயன்' என்றும், 'பிரமன்' என்றும் அழைக்கிறோம்.

படைப்புக் கடவுளாகிய, அயன் என்னும் குயவன் உயிராகிய ஆண்டிக்காக ஒரு தோண்டியை, ஓர் உடம்பைச் செய்து அந்த ஆண்டியிடம் கொடுக்கிறான்; தவணை பத்து மாதம்!

பூரணமான நிறை கர்ப்பத்துக்குத் திதிக் கணக்கிலே பத்து மாதம் என்று ஒரு பொதுக் கணக்கு உண்டு, அதைச் சொல்லுகிறார் சித்தர்,

பத்து மாதங்கள் கழித்து உயிராகிய ஆண்டிக்கு, அயனாகிய குயவனிடமிருந்து பாண்டம், தோண்டி கிடைக்கிறது!

தோண்டியை வாங்கிக் கொண்ட அந்த ஆண்டி அந்த நந்தவனத்திலே, அழகும் கவர்ச்சியும் நிரம்பிய இந்த உலக வாழ்விலே, என்ன செய்கிறான்?

''அடியே, கதையைக் கேட்டாயா?'' என்று சித்தர் சிரிக்கிறார். ஞானானந்தச் சிரிப்பாகச் சிரிக்கிறார்!

மிகவும் வேண்டினான் ஆண்டி! குயவனும் மிகவும் பாடுபட்டு ஓர் அழகான தோண்டியைப் பத்து மாதங்களாகச் செய்து அதை அந்த ஆண்டியிடம் கொடுத்தான்.

எத்தனை பாதுகாவலாகவும், எத்தனை ஜாக்கிரதையோடும் அந்தத் தோண்டியைப் பேண வேண்டும் அந்த ஆண்டி? ஆனால் அப்படிச் செய்தானா அந்த ஆண்டி ?

நெறியற்ற, பொறுப்பற்ற, கட்டுப்பாடு இல்லாத பைத்தியக்காரனைப் போல என்ன செய்தான் ஆண்டி ?

ஒரே கும்பக் குடம் ஆடி, குதித்துக் களித்துக் கூத்தாடி கூத்தாடி அந்த அரிய தோண்டியைத் தரையிலே போட்டு உடைத்து விட்டான் !

இந்த உடம்பு எதற்காகக் கொடுக்கப்பட்டது என்ற உயர்வை இழந்து, வாழ்வை வீணடிக்கிற பொறுப்பற்ற செயலை இப்படிப் பாடுகிறார் கடுவெளிச் சித்தர்.

மனித உடம்பு கிடைப்பது ஓர் உயிருக்கு அரிதிலும் அரிது! இதுவே ஞானிகள் கண்ட பேருண்மை, அந்த உடம்பும் சீரான பாத்திரமாக கிடைத்தது இன்னும் எத்தனை அரியஅரிய அருமை! அதை நல்ல விதத்திலே ஞானத்தோடு பயன்படுத்தாமல், கூத்தாடித்தனமாக வீணடித்தால் அந்த அவல நிலையைக் கண்டு சிரிக்கத்தானே வேண்டும்! அழவா செய்வது? சித்தர் அந்தப் பைத்தியக்காரத்தனத்தை வேதாந்தச் சிரிப்போடு பாடுகிறார்.

வாழ்வாங்கு வாழாமல் இந்த வாழ்க்கையைப் பொருளற்ற கேளிக்கையாகச் செய்து, உடம்பெடுத்த பயனை உணர்வோடு துய்க்காமல் வீணாக்குகிற செயலை, இப்படி ஓர் உருவகக் கதையாக வழங்குகிறார் பேரானந்த பெருஞ்சுகத்தை அனுபவித்த சித்தராகிய நம்முடைய கடுவெளிச் சித்தர்,

இவர் வாழ்க்கையை வீணடிக்காமல் பயன்படுத்த வேண்டிய வழிகளைக் கூறுகிறார்.

வேத விதிப்படி நில்லு நல்லோர்
 மேவும் வழியில் வேண்டியே செல்லு
மெய்ஞானப் பாதையிலே ஏறு—சுத்த
 வேதாந்த வெட்டவெளியினைத் தேறு
அண்டினோர்க்கு ஆனந்தமாம் வழிகூறு
 வைதோரைக்கூட வையாதே இந்த
வையம் முழுதும் பொய்த்தாலும் பொய்யாதே
 வெய்ய வினைகள் செய்யாதே கல்லை
வீணில் பறவைகள் மீதி லெய்யாதே
 மெய்குரு சொற் கடவாதே
பாரில் உயர்ந்தது பக்தி அதைப்
 பற்றின பேர்க்குண்டு மேவரு முக்தி
அன்பெனும் நன்மலர் தூவி பர
 பரமானந்தத் தேவன் அடியினை மேவி
இன்போடும் உன்னுடல் ஆவி
 நாளும் ஈடேற தேடாய் நீ இங்கே குலாவி

''இந்த உலகமே பொய் பேசினுலும், நம்மைச் சுற்றியுள்ள வர்கள் அத்தனை பேருமே பொய் பேசினுலும் நீ பொய் பேசாதே!'' என்று அடிக்கோடு போட்டு தமது அறிவுரையை வரைகிருர் கடுவெளிச் சித்தர்!

இனி 'அகிம்சை'யைப் பேசுகிருர். வார்த்தைகளிலே வசவு இருக்கக் கூடாது என்றும், பேச்சிலே பொய் கூடாது என்றும், வரையறை செய்கிற இந்த ஞானி. கொடிய செயல்கள் எதுவுமே செய்யக் கூடாது என்று கண்டிப்போடு கூறுகிருர்.

'வெய்ய வினைகள்' என்ருல் கொடிய செயல்கள். அவற்றைச் செய்யாதே,

தெருவிலே நம்மைக் கண்டு ஒதுங்கி ஓடுகிறது நாய். ஆனுலும் அதை விடுவதில்லை. குறி பார்த்து அந்த நாயின் மீது கல்லை எறிகிறது மனித இயல்பு!

அந்த நாய் இந்தச் சிறுவனைக் கண்டு குலைக்கவே வேண்டாம். சும்மா போனுலும் அதை விடுவதில்லை! மனித மனத்தின் அடிப்படை வெம்மை இது!

நாயைப் போலவேதான் பறவைகளை இம்சிப்பதும்! பறவை களைக் கல்லால் எறிவது கொடிய வெம்மைச் செயலாகும்!

இந்த உள்ளத்திலே பிற உயிர்கள் படுகிற வேதனையைக் கண்டு அதிலே களிக்கிற ஒரு வெய்ய இயல்பு இருக்கிறது! மனிதனுடைய உள்ளத்திலே அவனேடு பிறந்திருக்கிற விலங் கியல்பு இது! நமக்கு தீமை செய்யாத உயிருக்குமே ஓர் இடை யூற்றை அல்லது வேதனையை உண்டாக்கி, அந்தத் துயரத்திலே அந்த உயிர் தத்தளிப்பதைப் பார்ப்பதிலே நமக்கு ஓர் ஆனந்தம் இந்த மிருக உணர்ச்சியை முதலில் நாம் வெல்ல வேண்டும் என்று கூறுகிருர் சித்தபிரான்! 'நல்லவர் தம்மைத் தள்ளாதே' என்று மனிதக் கூட்டுறவின் மேன்மையைப் பேசுகிருர்.

'பெய்க்குரு சொற் கடவாதே' என்று குருபக்தியை வற் புறுறுத்துகிருர்,

பாரில் உயர்ந்தது பக்தி அதைப் பற்றின பேர்க்குண்டே மேவரு முக்தி என்று பக்தி நெறியை உபதேசிக்கிருர்.

அவர் கடுவெளியிலே பரத்தைக் கூடிய ஞானயோக சித்த ராக இருந்தபோதிலும், மக்களுக்கு அவர் அறிவுரை கூறும் போது, எல்லாருக்கும் எளிதாக இருக்கக்கூடிய பக்திவழியையே எடுத்துச் சொல்கிருர்.

மேவுதற்கு அரிதானது முக்தி என்ற நிலை. அது மேவரு முக்தி! அந்த அரிய முத்தியை அடைவதற்குரிய எளிய வழி முக்தியே!

''இளிய முறையிலே வழிபாடு செய்! அன்பு என்னும் மலர்களை இறைவனுக்கு அர்ச்சனை செய். ஆனந்தமயமான தேவனை, இறைவனை ஆனந்தமயமாக நீயும் வழிபடு! உடம்பை வருத்த வேண்டாம். பற்பல பயிற்சிகளிலே சிக்கி வருத்த வேண்டாம். இந்த எளிய, இனிய முறையை, நல்வழிபாட்டை நீ கடைப்பிடி! உன் உடலும் ஆவியாகிய உயிரும் ஈடேறும்! படிம்படியாக, நீ வழிபட வழிபட, நாள்தோறும் உன் உடலும் ஆவியும் ஈடேறும். இது மிக இன்பமான வழி, இந்த பூஜை நெறி! மலர்களுக்காக, அர்ச்சனைப் பூக்களுக்காக, நீ அலைந்து தேட வேண்டாம்...அன்பு மலர், அதுவே பெரிய மலர்! அதுவே பெ [illegible] அர்ச்சனை! இந்த உலகில், இந்த உலக வாழ்வில், இல்லறத்தில் குலாவி இருந்து கொண்டே இசைச் செய்யலாம். துறவியாக நீ மாறவேண்டாம்!'' என்று எளிமையிலும் எளிமை யாக மனிதன் ஈடேறுவதற்குரிய வழியை உபதேசிக்கிறுர்:

பெரிய பெரிய யோக மார்க்கங்களிலே தேர்ந்த சித்தர், கடு வெளிச் சித்தர். எல்லா நிலையிலும் உள்ள சாதாரண மக்களும் எளிதாகச் செய்து ஈடேறுவதற்கு இப்படி ஒரு மார்க்கத்தை, எளிய வழியை. நமக்குக் கூறுகிறுர்!

# விஞ்ஞானமும் மெய்ஞானமும் 2

விஞ்ஞானம் வளர வளர அதன் முதிர்ச்சியில் மெய்ஞானம் தோன்றும். மெய்ஞானம் என்றதும் துறவு நிலையும் விஞ் ஞானம் என்றுல் மேனுட்டு நாகரிக நிலையுமே மனதில் தோன்று வது சகஜம் ஆனுல் அது சரியல்ல. இன்றைய விஞ்ஞானிகள் பொருளைக் கொண்டுதான் தெளிகிறுர்கள். மெய்ஞானிகள் ஒவ்வொரு பொருளின் தத்துவார்த்தத்தை நுகர்ந்து தெளிவார் கள்.

ஒவ்வொரு பொருளுக்கும் அறிவு, இச்சை, செயல் மூன்றும் உண்டு என்று மெய்ஞானிகள் கண்டார்கள் இவை முறையே ஞான சக்தி இச்சா சக்தி கிரியா சக்தி இம் மூன்று நிலையில் இல்லாத பொருளே இல்லை என்பது அவர்கள் கண்டு பிடிப்பு இன்றைய விஞ்ஞானிகள் இம் மூன்று நிலையிலுள்ள செயலை மட்டும் தான் கண்டார்கள். இம் மூன்றையும் அடக்கி

எழுகின்ற உணர்ச்சியும் உண்டு என்று மெய் ஞானிகள் கண்டனர்.

**சாதாரண உணர்ச்சி**

அறிவு இச்சை செயல் இவைகளைக் கண்ட மெய்ஞானிகள் இப்பொருள்களை நுகரும் போது ஒரு சாதாரண உணர்ச்சி தோன்றியது பின் தங்களுக்குள் இவர்கள் இன்பம் நுகரும் போது ஒரு சாதாரண உணர்ச்சி தோன்றவில்லை அறிவும் இச்சையும் செயலும் மாண்டு போகும் உணர்ச்சியைக் கண்டார்கள். அவ்வுணர்ச்சியில் அவர்கள் அறிவு தொழிற்படவில்லை. இச்சை தொழிற்படவில்லை செயல் தொழிற்படவில்லை ஆகவே இவ்வுணர்ச்சி அறிவு இச்சை செயல் அடிப்படையில் அமையவில்லை இதையாரால் மறுக்க முடியும் அப்படி மறுப்பது என் தாய் மலடி என்பது போலாகும்.

இந்த மூன்றையும் அழிக்கும் முயற்சி எது? அதை ஆராய்பவனே மெய்ஞானி கண்ணுக்குத் தோன்றுகின்ற இரு பொருள்கள் (அழியக் கூடிய இரு பொருள்கள்) அறிவு இச்சை செயல் கூடிய இரு பொருள்கள் சேர்ந்த போது வரும் இன்ப உணர்ச்சி நிலை பெறவில்லை என்றால் கண்ணுக்குத் தெரியாத இரு பொருள்கள். (அழியாத இரு பொருள்கள்) அறிவு இச்சை செயல் பொருளைச் சேரும்போது நிலைத்த இன்பம் தரும் என்பதை அறிந்தனர்.

இதை சம்பந்தர் குறிப்பிடுகிறார்.

ஒரு நாள் நிகழ்ந்தது சொல்லவற்றே
நின்று உயிர்ப்பு அறவே
தருகாயம் இன்றி ஓர் ஆனந்தம்
எங்கும் தலைப்பட்டதே
மாயை மலம் எங்கே மறைந்ததோ மாயை தனில்
ஆய சகம் எங்கே அழிந்ததோ காயமதில்
தங்கும் புருடன் எங்கோ
சச்சிதானந்த வெள்ளம் எங்கும் மிகக் கோத்ததே

இனி அறிவு இச்சை செயல் இன்றி ஓர் உணர்ச்சி ஏற்படுவதில்லை இவற்றின் அடிப்படையில் தான் அது தோன்றுகிறது.

விஞ்ஞான முறையில் தோன்றும் மூவகை உணர்ச்சிகளில் முதல் நிலை தமோ குணத்தால் விளங்குவது என்றும் இரண்டாம் நிலை ரஜோ குணத்தினால் விளங்குகிறதென்றும், இச்சை அழிய அறிவு மிகுந்து நின்ற நிலையில் செயல் நிகழ்ந்த போது அறிவும் தொழில்படாமல் இருக்கும் மூன்றும் நிலையை சத்வகுணத்தினால் விளைகிறதென்றும் கூறினார்கள்.

**அறிவே உணர்ச்சி**

அறிவு மெய்யறிவு பரந்த அறிவு என்று இருவகைப்படுவதால் உணர்ச்சியும் மெய்ஞான உணர்ச்சி விஞ்ஞான உணர்ச்சி என இருவகைப்பட்டது.

அறிவை அப்புறப்படுத்திவிட்டு தோற்றுவிக்கும் உணர்ச்சி இல்லை. உயிரை அறிவுப்பொருள் என்று கூறியது இது பற்றியே அறிவே உணர்ச்சி அது பிரிக்கப்பட முடியாதது.

இந்த இரண்டிற்கும் அடிப்படையில் வேற்றுமை உண்டு.

விஞ்ஞானி ஐம்புலன்களையும் பயன்படுத்தி கருவிகளின் துணையால் அவற்றின் ஆற்றலைப் பெருக்கிக் கொண்டு பிரபஞ்ச உண்மைகளை அறிய முயல்கிறார் மெய்ஞானியின் நிலை முற்றிலும் வேறுபட்டதாகும், மெய்ஞானி தன் ஐம்புலன்களை ஒடுக்கி பிரபஞ்ச உண்மைகளை மட்டுமின்றி அப்பிரபஞ்சத்தைப் படைத்த சக்தியையும் அறிய முயல்கிறார்.

விஞ்ஞானி அறிவால் எதையும் பார்க்கிறார். மெய்ஞானி அருளால் எதையும் பார்க்கிறார். விஞ்ஞானியால் பார்க்க முடியாததையும் மெய்ஞானி பார்க்கிறார் அறிவின் எல்லையைக் கடந்து செல்ல மெய்ஞானியால் முடிகிறது,

இறைவன் சிந்திக்கக் கூடிய மனிதப் பிறவியை அளித்ததே நமக்கு ஒரு எச்சரிக்கை ஏ மனிதா! நீ செய்த பாவங்களைக் களைய உனக்கோர் அறிய வாய்ப்பு இது.

தன்னழகைக் கண்டுகளிக்க இரு கண்ணும் தன் பெருமைகளைக் கேட்க இரு காதுகளும் தன் புகழ் பாட வாயையும் நாக்கையும் தன்னைப் பூஜிக்க கைகளையும் தன் ஆலயத்திற்குவர இரு கால்களையும் தன் திருப்பாத துளசியை முக மூக்கையும் தன்னைப் பற்றிய பேருண்மைகளை அறிய அறிவையும் நமக்கு ஆண்டவன் கொடுத்திருக்கிறார்.

இப்புலன்களை நாம் இதன்படி உபயோக்காமல் மற்றைய வழிகளில் செலவிடுவது படிப்பதற்காக வெளியூர் வந்த மாணவன் கல்வியில் கவனம் செலுத்தாது சினிமா, ஆடல்-பாடல்களில் தன் நேரத்தைச் செலவிடுதல் போன்றது.

விஷயமறிந்த தந்தை தன் மகனை உடனடியாகக் கண்டிப்பது போல இறைவன் தண்டிக்காமல் சில துன்பங்களைப் கொடுத்துப் பார்க்கிறார். இதுதான் மீண்டும் மீண்டும் ஜன்மம். (பிறப்பு)

மிகக் கஷ்டப்பட்டு அடைய வேண்டிய மோக்ஷத்தை இக் கலியுகத்தில் அவன் நாமாவை பக்தியுடன் சொன்னாலே போதும் என்று இறைவன் ஏற்படுத்தியிருக்கிறார். பண்டைக் காலத் தவ முனிவர்கள் ''அடடா, நாம் கலியுகத்தில் பிறக்காமல் போனோமே!'' என்று வருந்தவும் கூடும்.

பகவன் நாமாவை சொல்ல வேண்டும் என்பதற்காகவே நம் குழந்தைகளுக்கு இறைவன் பெயரை வைக்கிறோம். ஆனால் கூப்பிடும்போது ஏதோ ஒரு பெயரை வைத்து அழைக்கிறோம். ஈஸ்வரன் என்ற பெயரை வைத்து 'ஈஸ்வரா' என்று அழகாகக் கூப்பிடலாமே! 'ஈச்சு' என்று அழைக்கிறோம். நாம் கஷ்டங்கள் வந்தால்தான் இறைவனை நினைக்கிறோம். பாண்டவர்களின் தாயான குந்தி கிருஷ்ண பகவானை வேண்டிக் கொண்டது என்ன தெரியுமா? ''எனக்குக் கஷ்டங்கள் வந்தால்தான் நான் உன்னை நினைக்கிறேன். ஆகவே எனக்குக் கஷ்டங்கள் வந்து கொண்டே இருக்கட்டும்'' என்று வேண்டினாளாம்.

நாமும் நம் வாழ்க்கையில் துன்பம் வரும்போதுதான் கடவுளைத் தொழுகிறோம். துன்பம் நீங்கப் பெற்றால் இறைவனிடம் அதிக நம்பிக்கையும் துன்பம் அதிகரித்தால் கடவுள் மீது ஒரு வெறுப்பும் அடைகிறோம். எப்போதும் இன்பத்தையே அனுபிக்க விரும்புகிறோம். நாம் முன் பிறவியில் செய்த பாவங்களின் பலனே இப்பிறவி என்பதை அடியோடு மறந்து விடுகிறோம், முன்பிறவியில் செய்த தீவினைப் பயனாக இப்பிறவியில் கஷ்டப்படுகிறோம் என்றுணர்ந்தவர்கள் எப்போதும் தெய்வத்தை நொந்து கொள்வதில்லை. துன்பங்களை பொறுமையுடன் சமாளித்து தெய்வ பக்தியுடன் வாழ்பவனுக்கு துன்பங்கள் சீக்கிரமே விலகிப் போகும்.

நம் ஜன்மம் கடைத்தேற யோக நெறியும் ஒரு வழி.

நம் உடலிலுள்ள நாடி நரம்புகளில் முக்கியமானவை மூன்று. இடை கலை (சூரிய நாடி), பிங்கலை (சந்திர நாடி), சுஷும்னை. பிராணயாம வழியைப் பின்பற்றினால் சுவாசம் குறையும். மன ஒடுக்கம் ஏற்படும் குண்டலினி☐ ஏற்றத்தால் நெற்றிக் கண் பிரதேசத்தில் ஒளி ஏற்படும், இந்த ஒளியின் உஷ்ணத்தை தாங்க உடலை வஜ்ர சரீரமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே 'கல்பம்' என்பதை சித்தர்கள் கூறியுள்ளனர்.

---

☐ 'பிரதிபா'வின் 'குண்டலினி சக்தி' பார்க்கவும்.

இக்கல்பம் பற்றிச் சொல்லுமுன் சில பெரியோர்கள் இந்த வாசி யோகத்தைப் பற்றி கூறியுள்ளது கவனிக்கத் தக்கது.

நெற்றிக்கு நேரே நிறைந்த ஒளி காணில்
முற்றும் அழியாது உடம்பு.
வாயு வழக்கமறிந்து செறித்தடங்கில்
ஆயுட் பெருக்க முண்டாம்.

—ஔவைக் குறள்

ஏற்றியிருக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாரில்லை
காற்றை பிடிக்கும் கணக்கறிவாளர்க்கு
கூற்றையுதைக்கும் குறியதுவாமே.

—திருமூலர்

மூலப் பிராணனை நோக்கும்—நோக்கின்
முத்தீயின் விடுமங்கே வந்து—சாயாகும்
வாலப் பிராயமும் வாய்க்கும்.

—மஸ்தான் சாகிபு

கால் பிடித்து மூலக்கனலை மதிமண்டலத்தின்
மேலெழுப் பிற்றேகம் விழுமோ பராபரமே.

—தாயுமானவர்

மூலநாடி தம்முளே முளைத்தெழுந்த வாயுவை
நூறு நூறு முடம்முளே நடுவிலிருத்த வல்லீரேல்
பாலனுகும் உம்உயிர் பறந்து போகலாய் விடும்.

—சிவவாக்கியர்

இப்பயிற்சிக்கு நல்ல ஆரோக்கியமான உடல் நிலை வேண்டும். சலனமற்ற மனம் அவசியம். இவைகளை சாதித்தால் நரை-திரை-மூப்பு-சாக்காடு இவைகளை தவிர்க்க முடியும்.

மனித உடல் அணுக்கள் தாங்களாகவே புதுப்பித்துக் கொள்ளக் கூடியவை.

எரிமலை தீ கக்கியதால் அழிவுண்டு புதையுண்ட இடங்களில் அகப்பட்ட மனித உடல் வாடாமல் இருந்ததாக புதைபொருள் நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள், சுந்தகத்தின் புகை மனித உடலில் புகுந்தால் உடல்கள் வாடாமல் இருக்கும் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

பழந்தமிழ் விஞ்ஞானிகளாகிய சித்தர்கள் உடலைக் காக்க தயாரிக்கும் மருந்துகளில் சுந்தகம் அவசியம் எனக் கூறியுள்ளனர்.

மனிதன் சாதாரண உடல் நிலை சூழ்நிலையில் ஓர் நிமிஷத்திற்கு 15 சுவாஸம் வீதம் விடுகிறுன், இந்த அளவில் ஓர் நாளில் 21600 சுவாஸம் விட்டால் அவன் (360 நாள் கொண்ட) 120 ஆண்டுகள் ஜீவித்திருக்கலாம். நிமிஷம் 20 அல்லது 30 ஸ்வாசங்கள் விட்டால் ஆயுள் பிரமாணம் முறையே பல வருஷங்கள் குறைந்து வருகின்றன.

ஜ்வரம், கடுங்கோபம், லாகிரி வஸ்துக்கள் உட்கொண்ட காலத்தில் ஸ்வாஸம் அதிதுரிதமாக நடைபெறுகிறது. அதற்கேற்றவாறு மனிதனின் ஆயுள் பிரமாணம் குறைகிறது.

ஹடயோக அப்பியாஸத்தினுல் வெகுகாலம் ஸ்வாஸ பந்தனம் செய்யும் சித்தர்கள் பல ஆயிர வருஷம் ஜீவித்திருந்தார்கள்.

இதை விளக்குவதே சர சாஸ்திரம்.

வலது நாசியில் ஸ்வாஸம் சஞ்சரிக்கும் காலம் சூரிய கலை என்றும் இடதுபுறம் ஸ்வாஸம் சஞ்சரிக்கும்போது சந்திர கலை என்று சொல்வதுண்டு. இரண்டு நாசித் துவாரங்களிலும் அஸ்வாஸம் ஓடும் காலம் சுழுமுனை அல்லது பூர்ண கலை எனப்படும்.

சூரிய கலையில் செய்யக் கூடிய காரியங்கள்: வலது நாசியில் சரம் சஞ்சரிக்கும்போது, உபதேசம் பெறல், உபதேசம் செய்தல், வித்தை கற்றுக் கொள்ளல், எதிரி சேனையைத் தாக்குதல், பயிரிடல், சூதாடல், விவகார வழக்குகள் பேசல், சங்கீதம், மருந்து சாப்பிடல், போஜனம் அருந்துவது, ஸ்நாநம் செய்வது முதலியன.

சந்த்ரகலை நடக்கும் சமயம் செய்யும் காரியங்கள் :— இடது நாஸியில் சரம் ஓடுங்கால் புது வஸ்தராபரணுதிகள் அணிதல் விவாகாதி சுபகாரியங்கள் செய்தல் வீடு வாங்குதல், வீடு கட்டுதல், புது வீடு குடிப்போகுதல், அரசனைக் காணல் முதலியன.

சுழுமுனை சூரியகலையில் செய்யும் காரியங்கள் :—இரு நாஸித் துவாரங்களிலும் சரம் ஒத்தோடுகையில், யோகாப்யாஸம், நிஷ்டையிலமற நன்று, மற்ற எவ்வித நற்காரியங்களும் இந்த சமயம் செய்யலாகாது.

தவிர சரம் ஓடும் பக்கம் பூர்ணகலை யென்றும் ஓடாத பக்கம் சூன்யகலை என்றும் கூறப்படும்.

யாத்திரை செய்ய சரம் பார்க்கவேண்டிய அவசியம்:—
வடக்கும் கிழக்கும் சூரியனின் திக்கு
மேற்கும் தெற்கும் சந்திரனின் திக்கு.

சந்திரகலை ஓடும்போது சந்திரனின் திக்கிலும் சூரிய கலையில் சூரியனின் திக்கிலும் பிரயாணம் செய்ய வேண்டும், இது மாறி நடக்கும் சமயம் யாத்ரை செய்யவேண்டியிருந்தால், எந்தக் கலை நடக்கவேண்டுமோ அந்தப் பக்கம் ஸ்வாஸத்தை 3 தடவை நன்ருக இழுத்துவிட்டால் சரத்தின் கதி மாறிவிடும்.

தவிர சரம் பார்க்கும் ஸாதனத்தால் பிறருக்கு நன்மை தீமைகள் சொல்லலாம்.

ஒருவன் ஒரு காரியத்தைப் பற்றிச் சரம் பார்ப்பவரின் பூர்ணகலை பக்கம் வந்து நின்று கேட்டால் காரியம் பலிதம். சூன்யகலையில் கேட்டால் பலிதமில்லை.

திதிவார நக்ஷத்திரங்களில் சரம் ஓடவேண்டிய கிரமம்: பஞ்ச பஞ்ச உஷக்காலம், அதாவது பொழுதுவிடிய 5 நாழிகை இருக்குமுன் (4-A.M.) எழுந்து சரம் பார்க்கும் கால் பூர்வபக்ஷ, பிரதமை, துவிதிகை, திருதிகைக்குச் சந்த்ரகலை நடக்கவேண்டும் கிருஷ்ணபக்ஷ பிரதமை முதல் திரிதிகை வரையில் சூரியகலை நடக்கவேண்டும் ஞாயிறு, செவ்வாய், சனி, வியாழன் சூரிய கலையும் திங்களும், புதனும், வெள்ளியும் சந்திரகலை நடக்க வேண்டும்,

இடதுபுற. வலதுபுறமாகச் சஞ்சரிக்கும் ஸ்வாஸம் இவ்விரு நாடிகட்கு மிடையே உள்ள சுகம்நாநாடி வழி சென்ருல் ஷட்சக்ரங்களில் சஞ்சரித்து சகல சித்திகளையுமளிக்கும் பிராண னுக்குப் பின் வெளிவர வழி இல்லை, இந் நிலை அடைந்தயோகி தான் விரும்பும் சமயம் தன் விசேஷ சக்தியால் கபாலத்தை பேதித்து ஸ்வாஸத்தை வெளிவிட்டு இந்த ஸ்தூலசரீர மிருந்து விலகுகிருன்.

ஸ்வாஸத்தை உள் இழுப்பது பூரகம், வெளிவிடுவது ரேசகம். பூரகம் செய்த வாயுவை நிறுத்துவது கும்பகம்: இது பிராணுயாம நியமம், உள்ளிழுக்கும் ஸ்வாஸம் ''ஸம்'' என்றும் வெளியிடும் ஸ்வாஸம் ''ஹம்'' என்றும் தொனியுடையன. இந்த நாதத்தில் மனதை லயப்படுத்த வேண்டும். இவை மந்த்ர சாஸ்ரப்படி சிவசக்தி பீஜங்கள். இவ்விரண்டும் சேருங்கால் ஸ்வாஸம் சுஷும்நா நாடியில் வியாபித்து சக்தி சிவ ஐக்கிய மான பரப்ரும்ம ஸ்வரூபத்தை தெரிவிக்கிறது.

தவிர ஸ்வாஸத்தின் சஞ்சார அளவையும் கவனிக்க வேண்டும்.

சாதாரண நிலையில் ஸ்வாஸம் வெளியில் 12 அங்குலம் வந்தால் ஆயுள் பிரமாணம் 120 வருஷம். ஆனால் நடக்கும் போது 24 அங்குலமும் ஓடும்போது 42 அங்குலமும் போக தூங்கும் காலம் 50, 60 அங்குலங்களும் செல்லும். ஆகையால் அதன் அளவை கூடிய அளவு குறைத்தால் ஆயுள் விர்த்தி அடையும். இவ்விதம் பிராண வாயு கட்டுப்படில மனம் கட்டுப் படும், அதனால் ஆயுள் கட்டுப்படும். யோகி மிருத்துவை ஜயிக்கிறான்.

## வாசி யோகம்

சூரியன், சந்திரன், அக்னி மூன்றும் நம் உடலிலேயே இருக்கின்றன.

இடது நாசியில் செல்லும் முச்சு சந்திரன். இடை வலம் என்பது சூரியன். பிங்கலை நடுவான அக்னி மூச்சு ஸுஷும்னை,

வாசி என்றாலே மூச்சு. வாசி என்றால் குதிரை என்ற பெயரும் உண்டு.

சுவாசத்தை அடக்க பயிற்சி மிகக் கடினமான அதே சமயம் மிக உயர்வான யோகம். இதை சித்தர் பாடுகிறார் -

> சூட்சக் குதிரை அடங்காது அழிக்
> கோட்டுக்குள் செல்ல முடியாது
> மூச்சுக்கு ஆயிரம் காதவழி
> மிக முந்தி நடக்குமாம் ஞானப் பெண்ணே.

இந்தக் குதிரை மனம் என்னும் கோட்டைக்குள் கட்டிப் போட்டிருக்கிறது.

சித்தர்கள் புருவ நடு இடத்தை சந்தை என்பர். ''சந்தையில் வைத்து சமாதி செய்'' என்பது அவர் பரிபாஷை.

> குதிரை கட்டிய லாயத்திலே—மனக்
> கோட்டையிலேசந்தைப் பேட்டையிலே
> எதிரி தான்வந்து தட்டுகிறான்—இதை
> ஏதென்று கேளடி ஞானப் பெண்ணே !

தேவர்கள் அசுரர்கள் என்பதெல்லாம் சித்தர்கள் மொழியிலே உருவகங்கள்! இந்த உடம்புக்குள்ளே செயற்படுகிற நல்லதும் கெட்டதுமான சக்திகள் அவை. உடம்பினுள் ஞான

வேள்வி நடக்கும்போது, அசுரர்கள் என்னும் தீய சக்திகள் உடம்பிலிருந்து கிளம்பி வந்து, யாகத்தை அழிக்கப் பார்ப்பார்கள். உடம்பாகிய பாற்கடலைக் கடையும்போது, அதில் நஞ்சு தோன்றும்! அமுதத்தைத் தீய சக்திகளாகிய உடற் கூறுகள் தட்டிக் கொண்டு போய்விடப் பார்க்கும்! இந்தப் பேருண்மைகளையெல்லாம் ஞானிகள் கதைபோல உருவகித்து, அருவமான சக்திகளுக்குக் கதாபாத்திரங்களாகிய உருவங் களைக் கொடுத்துச் சொல்லுவார்கள். நுட்பமாகப் பார்த்து இந்த உருவகங்களைப் புரிந்துகொள்ள வேண்டும். கதை என்று ஏளனமாய்ப் பொய்போலத் தள்ளிவிடக் கூடாது.

ஞானக்கும்மி,குதிரை என்றும், லாயம்சந்தை என்றும்,எதிரி என்றும் உருவகத்தியே பேசுகிறது! இந்த உருவகங்களுக்குள் அறிவியலோடு கூடிய பேருண்மைகளே பொதிந்துள்ளன. அறிவுக் கண்ணோடு அவற்றையே மேலும் பாடுகிறார், ஞானம் மிக்க கும்மித் தமிழிலே!

## வேதாந்தக் கப்பல்

*சத்குருவின் பாதமலர் சந்ததமும் சிந்தைபண்ணி*
*நிர்குணமாம் சரக்குக்கப்பல் தத்துவத்தைப் பாடுகிறேன்*
*ஏலேலோ*

*அந்த மாதியற்ற தொரு பரமாத்மாவினிடத்தில்*
*மந்தகாஸத்துடன் மாய்கை வந்து பிறந்தாள்*
*அப்பொழுதே மாய்கையிடம் அவித்தையும் உண்டானாள்*
*சந்திரனின் பிரதிபிம்பம் போல ஈசருண்டாக*
*அப்போதே ஈசரிடம் சிதாபாசனுண்டானான்*
*அக்ஞான மானதொரு பாசிவந்து சுழல*
*அகங்காரமான கொடி மிகுதியாகப் படர*
*அதனிடத்தில் ஆவரண விக்ஷேபமுண்டாகி*
*அசங்கமென்னும் கத்தியினால் அறுத்துக் கப்பல் ஏறப்பா*
*—ஏலேலோ*

*ஆவரண சக்தியவள் பரம ஆத்மாவை மறைத்திருப்பள்*
*பாய்மரத்துக் காக்காய் போல் பொல்லாப்*
*பாழ் மனமும் சுற்றிவரும்*
*மாயாரகிதரான வஸ்துவை அறிந்து*
*தாயுடனே தந்தையரைப் பொய்யென்றறிந்து*
*காயமென்னும் தேகமிதை கற்பிதம் என்றறிந்து*
*சாயா ஸ்வரூபமிந்த தேகம் என்றுஎண்ணி*

மாய்கையினுல் வந்ததென்று ஊகமுடன் பார்த்து
மகாவாக்கிய உபதேசம் குருவினுலடைந்து
ஆயக்காரன் போலிருக்கும் ராகம்தன்னைத் தள்ளி
அபரோக்ஷ ஞானந்தன்னை அறிவினுல் அடைந்து
சுவர் போல மறைந்திருக்கும் ஆவரணம் தள்ளி
சின்மயமாம் கப்பலிலே தன்மயமாய் ஏறப்பா
—ஏலேலோ

விக்யானக் கப்பலுக்கு மாயா விக்ஷேப சக்தியவள்
அக்ஞானத்தாலே மூடி அண்டமெல்லாம்
உண்டு பண்ணுவாள்
ஆகாசம் தன்னில் ஒரு சப்தமுண்டாகி
அதிலிருந்து வாயுவினுல் ஸ்பரிசமுண்டாகி
அதிலிருந்து அக்னியால் ரூபமுண்டாகி
அதிலிருந்து பிருதிவியால் கந்தமுண்டாகி
அதனதனின் பாதிப்பங்கு ஒன்றிற்கொன்று கலந்து
பஞ்சபூதம் என்ற பேரும் உண்டாகி
வஞ்சனையால் மூடியதை தோலினுல் போர்த்தி
மவடி மைந்தன் போலேயது மயங்குவதைப் பார்த்து
மஹா வாக்கியத் துடுப்பினுலே தள்ளி கப்பல் ஏறப்பா
—ஏலேலோ

சித்தான கப்பலுக்கு
சூக்ஷ்ம தேக முதலை வந்து
பொட்டெனவே வளைத்துக் கொண்டு
பொருள்தனையும் மறைத்திருக்கும்
கத்தினேன் குருபாதம் நன்ருகப் பணிந்தேன்
சத்சங்க வாசனையை சந்ததமும் அடைந்தேன்
யுக்தி சொன்ன குருமொழியை உள்ளந்தன்னில் நினைத்து
சுற்றிலும் ஓடுமிந்த மனதுதன்னை நிறுத்தி
சித்தந்தன்னை சொரூபந்தன்னில் சலியாமல் இருத்தி
கத்தி வரும் அகங்காரக் கரடிதன்னை யடித்து
காமக்ரோத லோப மோகக் கள்ளர்களைத் தள்ளி
பற்றியே படர்ந்திருக்கும் பாசக்கட்டை அறுத்து
முக்தியான படி தன்னிலே மெள்ள மெள்ள ஏறி
மோக்ஷ சாம்ராஜ்யமென்னும் கப்பலிலே ஏறப்பா
— ஏலேலோ

பரிபூர்ணக் கப்பலுக்கு ஜீவ பிராணவாயு பத்தும் கூடி
நரிபோல வளைத்துக் கொண்டு பரமாத்மாவை

நாடவொட்டாமல் மறைக்கும்
நிர்விகற்ப சமாதியினுல் ஊக்கமுடன் பார்த்து
நேதி நேதி வாக்கியத்தால் அவஸ்தை எல்லாம் தள்ளி
கருவி வரும் கர்மேந்திரிய சர்ப்பந்தன்னை யடித்து
சத்ருக்களாம் அகங்கார காமாதிகளை வென்று
மருவி வரும் மனமாதி மச்சங்களைத் துரத்தி
மகத்தான விஷயமென்று விஷயம் புரியாமல்
உருவியே ஓங்கார உலக்கைதன்னை எடுத்து
ஓரடியாகவே யடித்து கோசம் ஐந்தைப் பிரித்து
கருவிருக்கும் இடமதனை ஊக்கத்டன் பார்த்து
கர்மமென்னும் கயிறவிழ்த்து நிர்மலமாயிருந்து
கம்மலற்ற கப்பலினில் நிம்மதியாய் ஏறப்பா

—ஏலேலோ

மாய்கை என்னும் சக்தியவள் ஜீவா
மகத்தாதி காரணமாய்
தோகையவள் பொல்லாதவள் காண் உலகைத்
தோற்றுவிற்பாள் மெய்போல

ஆகாம்ய சஞ்சிதக் காமமுண்டாகி
அதனுலனேகவித ஜன்மமுண்டாகும்
சாகவும் ஜனிக்கவும் வழியுமுண்டாகும்
சத்துமன்று சத்துமன்று சத சத்துமன்று
சொரூபமன்று அருபமன்று பரமாத்மாவுமன்று
பின்னமன்று பின்னமன்று பின்னு பின்னமன்று
முன்னுமன்னு பின்னுமன்று மூலமுள்ள பிரகிருதி
கானல் ஜலம் போலவே காணும் ஜக மாயை
கண்டவர்கள் இன்னதென்று சொல்ல அறியார்கள்
கண்டு சொன்ன குரு வாக்கியம் நன்ருயறிந்து
வொட்டாமலடித்துத்து (மோகம்)
உண்டு பண்ணும் மாய்கை தன்னை அண்ட
முக்குணங்கள் அற்றிருக்கும் கப்பலில் ஏறப்பா

—ஏலேலோ

ஆதித்தனை மேகம் வந்து அடிக்கடி மறைப்பது போல்
அனுதியான ஆன்மாவை அவித்தை வந்து மறைத்திடினும்
ஜோதி ஸ்வரூபமே நாமென்றறிந்து
ஜாதி வர்ணுஸ்ரமம் நான்கையும் தள்ளி
வாது பண்ணும் மதமாதி ஆறையும் தள்ளி
வைராக்ய மென்கிற வாள்தன்னைப் பிடித்து
போத ஸ்வரூபமே நான் என்றறிந்து

பின் தொடர்ந்து வரும் மூன்று முக்குணங்களையும் தள்ளி
ஆதியந்த மற்ற வஸ்து நாமென்றறிந்து
ஆசை என்னும் பேய்தன்னை அண்டவொட்டாமலடித்து
ஈஷணாத்ரயங்களை இருக்கவொட்டாமலடித்து
தூஷணையும் பூஷணையும் இரண்டு மொன்ருய்ப் பார்த்து
திவ்யமாய் நிறைந்த கப்பலில் ஏறப்பா

—ஏலேலோ

ரஜ்ஜு சர்ப்பம் போல இந்த ஜீவா
பிரபஞ்சமெல்லாம் என்றறிந்து
சச்சிதானந்த ஸ்வரூபம் நாமும்
தாமென்று அறிந்துகொண்டு
தச்சன் கட்டும் வீடதுபோல் தேகம் என்றறிந்து
நிச்சயமாய் நிர்க்குணமே நிலை என்றறிந்து
துற்சங்கம் சேராமல் நற்சங்கம் பழகி
ஜனன மரணாதி பவக்கடலைக் கடந்து
கருணையினால் கடாக்ஷிக்கும் குருவைக் கண்டு அடைந்து
கண்டங்கத்தரி செடிபோன்ற தொண்ணூற்ருறும் தள்ளி
பச்சை மரத்தாணி போல குரு வாக்கியந்தன்னை கிரஹித்து
எச்சமற்ற வஸ்துவை உள்ளந்தனில் அறிந்து
மொண்டித்தனம் செய்கின்ற மாய்கைதன்னைத் தள்ளி
மோக்ஷ சாம்ராஜ்யமென்னும் கப்பலில் ஏறப்பா

—ஏலேலோ

சித்தாகும் கப்பலுக்கு முக்தனும்
ஜீவன் என்னும் செட்டி ஐயா
நல்ல சத்தான சரக்குக் கட்டி
உபசாந்தி ரத்ன முதலெடுத்தான்.
ஷட்வித லிங்கமாம் சந்தனக் கட்டை
சாதனங்கள் ஆகின்ற சதுஷ்டயங்களாகும்
ஜாதிக்காய் ஜாதிபத்ரி ஏலம் கிராம்பு
ஆருதாரமென்னும் ஆணிமுத்துப் பவழம்
மாதா கர்ப்பஞ்சயித்து அடைந்த வெண்பட்டு
சோதித்தாராய்ந்தெடுத்த சிந்தாமணி ரத்னம்
ஜபதபமென்ற நல்ல வஜ்ர வைடூர்யம்
உபரதி திதிக்ஷை என்னும் கந்தப்பொடி புனுகு
சப்தாவஸ்தை என்ற கற்பூரப்பாளம்
சிரவண மனன நிதித்யாசனப் பலகை
சற்குருவின் சாக்ஷாத்கார கிருபையினாலே
அகண்டார்த்தக் கப்பலில் அசையாமல் ஏறப்பா.

—ஏலேலோ

# அஷ்டமா சித்தி 3

சித்தியும் சித்தி தரும் தெய்வமாகித் திகழும் பரா
சக்தியும் சக்தி தழைக்கும் சிவமும் தவமுயல்வார் முக்தியும்
முக்திக்கு வித்தும் வித்தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தை யன்றே.

—அபிராமி அந்தாதி-29

அணிமா மகிமா சைவ கரிமா லகிமா ததா
ப்ராப்தி: ப்ரகாம்ய மீசித்வம் வசித்வம் சாஷ்டபூதய:

இந்த சித்திகளைப் பெற யோகம் மந்திரம் உபாஸனை இவை களே சாதனம்.

## அஷ்டமா சித்தி

இம்மாதிரி சுவாஸத்தைக் கட்டுப்படுத்துவது அஷ்டமா சித்திகளில் ஒன்று.

இந்த எட்டுவித சித்திகள்: அணிமா, மகிமா, கரிமா. லகிமா, பிராந்தி, பிராகாம்யம், ஈசத்துவம், விசித்துவம்.

**அணிமா:** மிக நுண்ணிய உருவெடுத்தல். ஈ: கொசு போன்ற உயிர்களிலும் பரமாணுவாய் சென்று தங்கும் தன்மை.

**மகிமா:** மண் தத்துவம் முதல் பிருத்வி தத்துவம் வரை 36 தத்துவங்களின்□ உள்ளும் புறமும் நீங்காது நிறைந்துள்ள பெருமை.

**லகிமா:** இலவம் பஞ்சுபோல் தன் உடலைக் கனமற்று இருக்கச் செய்தல்.

**கரிமா:** மிகவும் கனமாக யாரும் அசைக்கவே முடியாதபடி தன்னை செய்து கொள்வது.

**பிராந்தி:** உலகம் விட்டு உலகம் சென்று மீண்டும் திரும்புவது.

**பிரகாமியம்:** வேறு உடலில் புகுதல். (கூடுவிட்டு கூடு பாய்தல்)

விண்ணில் சஞ்சரித்தல், இருக்கும் இடத்திலிருந்தே பிற இடங்களில் நடைபெறும் விஷயங்களை அறிதல்.

---

□ தத்துவ விளக்கம் பிரதிபாவின் ''குண்டலினி சக்தி' காணவும்.

**ஈசத்துவம் :** தெய்வத் தன்மை. ஆக்கல் காத்தல் அழித்தல் மூன்றையும் செய்யக் கூடிய சக்தி.

**வசித்துவம் :** பறவை, விலங்கு, பூதம், மனிதர், தேவர் எல்லோரையும் தன் வசமாகச் செய்வது. இந்த அணிமா சக்திகள்.

இந்த அஷ்டமா சித்தி தேவதைகள் ஸ்ரீசக்ரத்தின் முதல் ஆவரணமான முதல் கோட்டின் அதிதேவதைகள். ஸ்ரீசக்ர ஆவரணத்தில் ஆரம்ப ஆவரண தேவதைகளே இவ்வளவு சக்தி வாய்ந்தவர்கள் என்ருல் மேலும் போகும் ஒவ்வொரு ஆவரண தேவதைகளின் சக்தி எப்படியிருக்க வேண்டும் என்று ஊகித்துப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இப்பேர்ப்பட்ட அணிமாதி சித்திகளைப் பெற்றவர்கள் நீர் மேல் நடப்பதிலோ, கரடி வெம்புலி வாயைக் கட்டுவதிலோ என்ன ஆச்சர்யம்.

திருவிளையாடற் புராணத்திலுள்ள பாடலாவது :

அணிமா லகிமா அரிய கரிமா பிராந்தி மலப்
பிணிமா கடையோர்க் கடைவரிய பிராகாமிய
மீ சுத்துவமெய்
துணிமா யோகர்க்கெளிய வசித்துவ மென்றெட்டா
மிவையுளக்கண்
மணிமா சறுத்தோர் விளையாட்டின் வகையா மவற்றின்
மரபுரைப்போம்

இது தொடர்ந்து எட்டு பாடல்களில் அஷ்டமா சித்தி விளக்கம் தரப்பட்டுள்ளது.

இச்சித்திகளைப் பற்றி தணிகை புராணம் அகத்தியன் அருட் பெறு படலத்தில் பின்கண்ட பாடலில் குறிப்பிடுகிருர் கச்சியப்ப முனிவர்.

அணுவினுள் நுழைநுண்ணுருக் கொளல்
ஆழ்ந்த அளற்றிடை அஃது ஒட்டாது இயங்கல்
மணிநெடு வரையிற் பெருத்தல் வேட்டன எவ்
வளங்களும் செறிதல் ஆயிரவர்
திணிமுலை திளைத்தல் பெருவலியினரும்
சென்றடி பேணல், யாவர்களும்
தணிவர விழைதல் வலியரும்
தடாமை சாற்றிய இவைகள் எண்சித்தி.

இந்த எட்டு சித்திகளும் மெய்ஞானத்திற்கு உதவாதவை, இவற்றினை அபர சித்தி எனவும் கூறுவர்.

திருமூலர் அஷ்டமா சித்திகளைப் பற்றிக் கூறியுள்ளதாவது :

தானே அணுவும் சகத்துத்தான் நொய்ம்மையும்
மாணுக்கனமும் பரகாயத் தேகமும்
தாணுவதும் பரகாயஞ்சேர் தன்மையும்
ஆணுத வுண்மையும் வியாபியுமாம் எட்டே,

அணு-அணிமா; சகம்-மகிமா; நோன்மை-கரிமா; ககனம்-லகிமா; பரகாயத் தேகம்-பிராப்தி தாணுவது-பிரகாம்யம் ஆணுத உண்மை ஈசத்துவம்; வியாப்யம்-வசித்துவம்.

இந்த எண் வகை யோகத்தால் சித்தியாம் எண்வகைப் பேறு பெறுவது மட்டுமல்லாமல் பலவகை அறிவுகளும் புலப்படும்.

அணிமா-நுண்மை
லகிமா-மென்மை
மகிமா-பருமை
பிராத்தி-விரும்பியதெய்தல்
கரிமா-விண்தன்மை
பிரகாம்யம்-நிறைவுண்மை
ஈசத்துவம்-ஆட்சியதனுதல்
வசித்துவம்-கவர்ச்சி

பத்து நாடிகளில் இறந்த பின் உடல் வீங்க வைக்கும் தனஞ்சயனை தவிர்த்து ஒன்பது நாடிகளில் ஒன்பது வாயுக்கள் செல்கின்றன. நரம்பு என்றாலும் நாடி என்றாலும் ஒன்றே.

இடப்பால் நரம்பு - இடகலை
வலப்பால் நரம்பு - பிங்கலை
நடுநரம்பு - சுழுமுனை
உள்நாக்கு நரம்பு - சுழுமுனை
வலக்கண் நரம்பு - புருடன்
இடக்கண் நரம்பு - காந்தாரி
வலச்செவி நரம்பு - அத்ரி
இடச்செவி நரம்பு - அலம்புடை
கருவாய் நரப்பு - சங்கினி
எருவாய் நரம்பு - குகு

தனஞ்செயன் நடுநரம்பில் தங்குவதாகும்.

இச்சித்திகள் முதற்படியாகுமே ஒழிய முக்கிய குறிக்கோளை அடைய உதவாது. இந்த மாதிரி சித்திகளை விலக்க வேண்டும் என்கிறுர் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

பின் உயர்வான சித்திகள் எது? திருமந்திரம் மூன்ரும் தந் திரத்தில் திருமூலர் குறிப்பிடுகிருர்.

சித்திகள் எட்டன்றி சேரெட்டி யோகத்தால்
புத்திகளானவை எல்லாம் புலப்படும்
சித்திகள் எண்சித்தி தானுந்திரிபுரை
சக்தி அருள்தரத் தானுறவாகுமே.

அருள் சித்திகளே பரசித்திகள். அனைத்துக்கும் நுண்ணிய ஞன இறைவனை சிவயோகத்தால் தானும் நுண்ணியனுக்கி அறிந்து காணுதல் ''பர அணிமா'' எனப்படும்.

ஸ்ரீவித்யையில் பத்து சித்திகள் கூறப்படுகின்றன. கரிமாவை நீக்கி புத்தி சித்தி, இச்சா சித்தி, சர்வகாம சித்தி ஆகிய மூன்றை யும் சேர்த்துள்ளது, இவையன்றி காய சித்தி, யோக சித்தி, மந்திர சித்தி இவை அனைந்தும் திரிபுரசுந்தரியே யாவாள். பராசக்தியே முதல் ஆவரணத்தில் சித்தி தரும் தேவிகளாக விளங்குகிருள். இதனுல் அம்பிகைக்கு மகா சித்தி, சித்த மாதா சித்தேஸ்வரி என்ற பெயர்கள் ஏற்பட்டுள்ளன.

முருகனை வளர்த்த கார்த்திகைப் பெண்கள் ஆறு பேரும் தங்களுக்கு அஷ்டமா சித்திகளைப் பற்றி உபதேசிக்கும்படி சிவ பெருமானை வேண்டிக் கொண்டனர்.

''என் தேவியிடம் அஷ்டமா சித்திகள் சேடியர்களாகப் பணிபுரிபவர்கள். நீங்கள் அவளை ஆராதியுங்கள். நீங்கள் என்னைக் கேட்டதால் உங்களுக்கு உபதேசிக்கிறேன்'' என்று சிவபெருமான் அவர்களுக்கு உபதேசித்தார், இக் கார்த்திகைப் பெண்கள் அம்பிகையை ஆராதிக்காமல் இருந்து விட்டதால் இந்த சித்திகள் மறந்து போய்விட்டன. இதை அறிந்த சிவ பெருமான் அவர்களை பட்டமங்கை என்ற தலத்தில் ஒரு ஆல மரத்தடியில் கல்லாகப் போகும்படி சபித்துவிட்டார். பின் கருணையுடன் நான் மதுரை வந்து உங்களுக்கு அட்டமா சித்தியை விளக்கும்போது உங்கள் சாபம் தீரும்'' என்ருர்.

பின் தன் வாக்குறுதிப்படியே அவர்கள் முன் தோன்றி உபதேசம் செய்தார்.

சிவயோகிகள் என்னை அறிந்திருப்பதால் இச்சித்திகளை விரும்பார்கள். ஆனுல் அவர்கள் விரும்பாவிட்டாலும் அவர்கள்

உடம்பின் நிழல் போல அவர்களைத் தொடர்ந்து உலகினருக்கு அவர்கள் பெருமையை உணர்த்திவரும்'' என்றார் சிவ பெருமான்.

அந்த அறுவரும் அம்பிகையை ஆராதித்து இந்த சித்தி கைவரப் பெற்றனர்.

## மூவகை சித்திகள்

மூவகை சித்தியின் முடிபுகள் முழுவதும்
ஆவகை எனக்கருள் அருட்பெருஞ்சோதி.

—ராமலிங்க சுவாமிகள்

சித்திகள் மூன்று வகை. அவை கர்ம சித்தி, யோக சித்தி, ஞான சித்தி,

அணிமா முதலிய அஷ்ட சித்திகளைப் பெறுவது கர்ம சித்தி. சித்தி ஏற்படும் காலம் 23/4நாழிகை முதல் 33/4வருஷத்திற்குள்.

64 சித்திகளைப் பெறுவது யோக சித்தி, இறந்தவரை அவர் தேகம் நாசமடையுமுன் இந்த சித்திகளைக்கொண்டு உயிர்ப்பிக்க முடியும். சித்தி ஏற்படும் காலம் 12 வருஷம் முதல் 108 வருஷம் வரை.

688 கோடி பேதமாகிய மகா சித்திகளை தன் இஷ்டம்போல நடத்துவது ஞான சித்தி. இது 6 வகை.

கர்ம ஞான சித்தி - அது அதுலாகி நிறைதல்.
யோக ஞான சித்தி - அது அதுவாகி விளங்குதல்
தத்துவஞான சித்தி - அது அதுவாகி இனித்தல்
ஆன்ம ஞான சித்தி - ஆதீதமாக இனித்தல்
சுத்த ஞான சித்தி - அவை அனைத்துமாக ஒருமித்தல்
சமரஸ சுத்த ஞான சித்தி - அதீதாதீதமாகுதல்
மூவகை சித்தியின் முடிபுகள் முழுவதும்
ஆவகை எனக்கருள் அரும்பெரும் ஜோதி
கர்ம சித்திகளின் கலைபல கோடியும்
அரசுற எனக்கருள் அருட்பெருஞ் சோதி
யோக சித்திகள் வகை உறுபல கோடியும்
ஆக என்றெனக் கருளி அருட்பெருஞ் சோதி
ஞான சித்தியின் வகை நல்விரியனைத்தும்
ஆனியின்றெனக்கருள் அருட்பெருஞ் சோதி

—வள்ளலார்

(அருட்பெருஞ்சோதி அகவல்)

# சித்தர் பரிபாஷை 4

ஒவ்வொரு சொல்லுக்கும் மொழி அறிந்த அனைவரும் உணர்ந்துகொள்ளக் கூடிய பொதுவான பொருள் உண்டு, அப்படி அனைவரும் புரிந்துகொள்ளக் கூடிய தன்மை இருப்ப தால்தான் மொழி வளர்ச்சி பெற்றுக் கொண்டிருக்கிறது.

பொதுப்படையாக சராசரி மனிதர்களுக்கும் ஆன்ம ஒளி பெற்ற பெரியோர்களுக்குமிடையே மிகவும் வேற்றுமை உண்டு. ஆனந்த பரவச நிலையிலுள்ளவர்கள் தமக்குள் பேசிக் கொள்கிற பேச்சிலும் வேறுபாடு தோன்றுவது இயற்கையே. இப்படிப்பட்ட சித்தர்கள் பேச்சில் இரு பொருள்கள் த்வனிக்கும்.

1. வெளிப்படையாக அனைவரும் அறியக் கூடியது.

2. மற்ருெரு சித்தர் மட்டுமே புரிந்துகொள்ளக் கூடிய மறைபொருள்.

உதாரணமாக 'உட்கார்' என்ற சொல்லுக்கு அமர்ந்து கொள் என்று அர்த்தம். ஆனல் சித்தர்களுக்கு இப்பொருளே வேறு. உட்கு + ஆர் = உன் உள்ளத்தில் அமைதி ஏற்படட்டும். உட்கார் என்பதை பேச்சு மொழியில் 'ஒக்கார்' என்று சொல் கிருேம். ஒக்கு + ஆர் = என்னுடன் ஆன்ம ஒளி பெறுக என்பது சித்தர்கள் பரிபாஷையில் அர்த்தம்.

இதைப் போல சில வார்த்தைகளுக்குப் பாரதியார் பரிபாஷை விளக்கம் தந்திருக்கிருர்.

நஞ்சு என்பது உடலின் கேட்டை உண்டாக்கும். சுக்கிலம் என்பது சித்தர் பரிபாஷை. யோகம் காரணமாக சுக்கிலம் வற்றிவிடும். ஊர்த்துவ ரேதஸ் ஏற்பட சுக்கிலம் வற்றியேயாக வேண்டும்.

## சித்தர் பாடல்கள்

செய்வதற்கரிய பல அற்புதச் செயல்களைச் செய்தனர். சிலர் இத்துடன் நிற்காமல் பரமனிடம் லயமாகி தாம் கண்ட சித்தியைப் பாடல்களில் அமைத்தவர் சிலர்.

சித்தர்கள் எல்லோருமே நல்ல மொழிப் புலமையுடையவர் கள். அவர்கள் பாடல்களில் எளிமையையும் கடுமையையும் காணலாம்,

தெளிவான தமிழ் நடையில் தம் சிந்தனை ஓட்டத்தில் கிடைத்த அரும் கருத்துக்களைப் பாடலாகப் பாடியுள்ளனர்.

நாடோடிகள் பாடுவதற்கேற்ற மெட்டில் லலிதமாகவும் சுவை நிறைந்ததாகவும் சிலேடை உள்ளதாகவும் பாட்டு அமைந்திருக்கும். பிச்சைக்கு வரும் முற்காலப் பண்டாரப் பரதேசிகள் இவைகளைப் பாடி வருவர்.

மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக் கோனே
முக்தி வாய்த்ததென்னுடா தாண்டவக் கோனே
மாடு கன்று செல்வமும் மனைவி மைந்தர் மகிழவே
மாடமாளிகைப் புறத்தில் வாழுகின்ற நாளிலே
ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே
உடல் கடந்து உயிர் கடந்த உண்மை கண்டு முணர்கிலீர்.

—இடைக்காட்டுச் சித்தர்

ஊத்தைச் சடலமென்றெண்ணுதே இதை
உப்பிட்ட பாண்டமென்றெண்ணுதே
பார்த்த பேருக்கே ஊத்தையில்லை இதை
பார்த்துக்கொள் உன்றன் உடலுக்குள்ளே,

—சிவவாக்கியர்

## சித்த மார்க்கம்

சித்தர்கள் கண்ட அறிவின் விளக்கமே சித்த மார்க்கம். இம் மார்க்கத்தைப் பற்றிய பாடல்கள் எல்லாம் ஒரே யாப்பு முறையில் அமைந்திராவிட்டாலும் இவைகளின் அமைப்பு முறையில் ஓர் ஒருமைப்பாடு இருக்கும். ஆனால் கருத்து மிக மிக ஆழமாக இருக்கும்.

எளிமையைப் போலவே மற்றொரு சிறப்பு அப்பாடல்களில் அங்கங்குள்ள அலை வீச்சாகும். சில பாடல்கள் சலனமற்று இருப்பதாகத் தோன்றும்.

இந்த மனித உடம்பில் தெய்வ பக்தி கொண்டு இதனுள் அருட்சக்தியை வளர்த்து ஆன்ம பரிமாணத்தால் மக்களிடையே தேவர்களாகவும் உலவு தெய்வ வாழ்வு வாழ்ந்து அருளை வழங்கி வந்தவர்களே சித்தர்கள்.

சித்தர்களுக்கு சித்தி எப்படி கைகூடியது? இதற்கு திருமூலர் பதில் கூறுகிறார்:

யோக சமாதியின் உள்ளே அகலிடம்
யோக சமாதியின் உள்ளே உள்ஒளி
யோக சமாதியின் உள்ளே உளசக்தி
யோக சமாதி உகந்தவர் சித்தரே.

திருமூலர் சொல்கிற யோகசமாதி இந்த உடம்பிலே தெய்வ சக்தியை கூட்டுகிற தவயோகமே சித்தர்களின் தவநெறி.

இந்த மனித உடம்பே தெயவத்தைக் காணும் ஒப்பற்ற சாதனம் என்று தெளிகின்ற நிலை சித்த நிலை. இதையே திருமூலர்,

உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே.

இத்த உடல் கோவிலைப் பத்திரமாகப் பாதுகாத்து இறைவனுக்குரிய இடமாக அமைத்து யோக சமாதி உகந்தவர்களே சித்தர்கள். இவர்களின் ஆற்றல் கண்கட்டு வித்தையல்ல. இந்த ஆற்றல் உலகையே உய்விக்கின்ற ஆற்றல்,

இந்த உடலுக்கு முக்கியத்துவம் கொடுத்த காரணத்தால் தான் உடம்பின் நுட்பங்களையும் இயல்புகளையும் மனதின் தன்மைகளையும் ஆதாரங்களையும் ஆராய்கிற காயசித்தி உபாயங்களும் வைத்திய முறைகளும் விஞ்ஞான அறிவும் சித்தர் இலக்கியத்தில் இடம் பெற்றன.

உடல் தத்துவத்துடன் மனக்தத்துவத்துடன் விஞ்ஞான தத்துவம், மெய்ஞான தத்துவமும் பாதுகாக்கப் பட்டன,

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வுலகம் என்பதே சித்தர்கள் வாழ்க்கையின் நோக்கம்,

## கூடுவிட்டு கூடுபாயும் கலை 5

சவமாகாமல் சீவனை இருப்பது உடம்பிலுள்ள உயிரால். இந்த உயிர் மூச்சாகப் போய் வந்து கொண்டிருக்கும் வரையில் எல்லாம் சரி. அந்த மூச்சு அடங்கி விட்டால், உடல் சவமாகி விடுகிறது. பிற உடம்பிலுள்ள உயிர் அவ்வுடலைவிட்டு, சவத்தின் உடலில் புகுந்தால் இறைந்தவன் பிழைப்பான். இதற்குப் பெயர் பரகாயப் பிரவேசம் அல்லது கூடுவிட்டுக் கூடு பாய்தல்.

இது எங்கேயாவது நடக்கக் கூடுமா? இப்படிச் செய்வது சாத்தியமா? என்ற கேள்விகள் எழலாம், சித்தர்களுக்கு எல்லாம் சாத்தியமே.

ஒரு இடைப்பையன், மாடுகளை மேய்த்துக் கொண்டிருப்பவன். மாடுகளிடம் அவனுக்கு அளவற்ற அன்பு. அவனிடம் மாடுகளுக்கு மிகப் பிரியம். ஒரு நாள் மூலன் என்ற அந்த இடையன் இறந்துவிட்டான். மாடுகள் துக்கம் தாளாமல் அவன் உடம்பை நக்கிக் கொடுத்து கண்ணீர்விட்டு நின்றன. அந்த வழியே சித்தர் வந்தார், பசுக்களின் துக்கத்தை நீக்க தன் உடலை ஒரு புறமாக வைத்துவிட்டு, கூடுவிட்டு கூடு பாயும் கலையால் தன் தேகத்தைவிட்டு அந்த இடையன் தேகத்துள் புகுந்தார். மாண்ட அச்சிறுவன் தூங்கி யெழுந்ததுபோல் எழுந்தான். பசுக்கள் ஆனந்தத்தால் துள்ளின; பாலைச் சொரிந்தன பசுக்களின் ஆனந்தத்தைக் கெடுக்க எண்ணுமல் அந்த சித்தர் மூலன் என்ற இடையன் உடலிலேயே தங்க முடிவு செய்து திருமூலராஞர்,

ஆதிசங்கரர் சரஸ வாணியுடன் வாதிட்டபோது சிருங்கார ரஸம் பற்றிய சில கேள்விகளுக்கு விடை அறிய இறந்து போன ஒரு அரசன் உடம்பில் பரகாயப் பிரவேசம் செய்து தன் பூத உடலுக்கு, ஆபத்து நேர்ந்த காலத்தில் மீண்டும் பரகாயப் பிரவேசம் செய்து தன்னுடலில் புகுந்தார்.

சரித்திரப் பிரசித்திப் பெற்ற விக்கிரமாதிந்த மகாராஜாவும், இது மாதிரி கூடுவிட்டுக் கூடு பாய்ந்ததாக சரித்திர வரலாறு இருக்கிறது. அருணகிரிநாதர் கிளியுருவைக் கொண்டார் என்பதும் இக்கலை மூலம்தான்.

சட்டையை நாம் சாமானியமாகக் கழற்றி வேறு சட்டையை அணிவது போல. சித்தர்களும் மகான்களும் இதை செய்துள்ளனர்.

எல்லா ஜீவராசிகளிலும் ஆத்மா ஒன்றே, சவமாக இப்போது ஆகியுள்ள உடலில் இருந்த ஆத்மாவும் அதில் பிரவேசிக்க விருக்கும் ஜீவனின் ஆத்மாவும் ஒரே மாதிரியானவை; ஆத்மாவின் இந்தத் தன்மையை அறிந்த ஞானியால் தான் இந்தப் பரகாயப் பிரவேசக் கலையைக் கையாள முடியும், ஆத்மாவை அறிந்தவன், சகல கலைகளையும் அறிந்தவன். ஆத்மாவை அறிந்து புலன்களால் பாதிக்கப்படாமல் காத்துக் கொள்ளுதல் 'அவஸ்தைப் பிரயோகம்' எனப் பெயர்,

புலன்களின் வழி மனதைச் செலுத்தாமல், மதியின் வழி புலன்களைச் செலுத்துவது மன வலிமையை ஏற்படுத்தும்.

கூடு விட்டுக் கூடு பாய்வது போன்ற சித்துக்களைச் செய்ய வழிதான் என்ன?

சித்து என்பது ஆன்மப் பயிற்சியின் விளைவு. இந்த ஆன்மப் பயிற்சிக்கு மனம், உடல், ஆன்மா மூன்றும் தூய்மையாக இருக்க வேண்டும்.

பக்தி மூலம் சித்தி பெறலாம். உதாரணம் கண்ணப்ப நாயனர். யோகம் மூலம் சித்தி பெறலாம், பக்தி வழி சுலபம். யோக வழி கடினம்.

தூய்மை அல்லது ஒழுக்கம் பற்றிக் குறிப்பிட்டோம். அது நான்கு வழிகளில் இருக்க வேண்டும்.

1. இந்திரிய ஒழுக்கம்: மெய், வாய், கண், செவி, மூக்கு என்ற கர்மேந்திரியங்களால் நல்லனவற்றையே செய்தல்.

2. கரண ஒழுக்கம்: தன்னைப் பற்றி நினைக்காமல் இருப்பது கோபத்தை அடக்கல், மனத்தை புருவ மத்தியில் நிறுத்தல்.

3. ஜீவ ஒழுக்கம்: உயர்ந்தவர்—தாழ்ந்தவர், ஆண்—பெண் இத்தகைய பேதமின்றி சரி சமத்துவமாக நடந்து கொள்ளல்.

4. ஆன்ம ஒழுக்கம்: எல்லா உயிரும் சமமாக அந்தஸ்து பெற்றவையே. எல்லாம் பசுக்கள்; இறைவன் ஒருவனே பதி.

அஷ்டாங்க யோகம் மூலம் இந்த ஒழுக்கங்களைப் பெறலாம். அவை இயமம் (தீயவை ஒழித்தல்), நியமம் (ஒழுங்கான வழி நிற்றல்), ஆசனம், பிராணாயாமம் பிரத்யாகாரம், தாரணை, தியானம். முதல் மூன்றும் உடல் பயிற்சி. அடுத்த மூன்றும் மனப் பயிற்சி. கடைசி இரண்டும் ஆன்மப் பயிற்சி.

இம் மூன்று பயிற்சிகளும் பெற்றவர்கள் குண்டலி யோகத்தில் வெற்றி பெறுவர். இந்த குண்டலி யோகத்திற்கும் எட்டுப் படிகள் உண்டு. சிவஞான சித்தியார் இலக்கண விளக்க பரம்பரை ஸ்ரீசிதம்பர நாததேசிகர் உரையில் பின்கண்ட பாடல இதை விளக்குகிறது.

ககமார்க்கம் புலனொடுக்கி தடுத்துவளி இரண்டும்
சலிப்பற்று மூச்சதுர மூலாதாரங்கள்
அகமார்க்க மறிந்து அவற்றின்
அரும் பொருள்கள் உணர்ந்து

அணைந்து போய் மேலேறி
அலர்மதி மண்டலத்தின் முகமார்க்க
அமுதுண்டு அலமுட்டதேக்கி
முழுச்சோதி நினைத்திருந்து தன் மூதலாக
வினைகளாக மார்க்க
அஷ்டாங்க யோக முற்றும் வழந்தலுழந்தவர்
சிவன் தன் உருவத்தைப் பெறுவர்.

1. சகமார்க்க புலனொடுக்கி-முதலாவது புலனொடுக்கும் சக மார்க்கம் என்றால் இறைவனை எக்காலத்திலும் எந்நிலையிலும் விட்டிணைபிரியாதிருக்கும் யோக மார்க்கம்.

2. கேவல கும்பகம் சிந்திக்கப் பழகுதல். வளி என்றால் காற்று. பிராணயாமம் சித்தி பெற வேண்டும்.

3. முச் சதுர மூலாதாரம் அகமார்க்க மறிந்து, அதோ முக மாயுள்ள முக்கோண வடிவான மூலாதாரம் முதல் ஊர்த்துவ முகமான முக்கோண வடிவான ஆக்ஞா சக்கிரம் வரை ஆறு ஆதாரங்களையும் அதன் சக்திகளையும் அறிந்துணர வேண்டும்.

4. அவற்றின் பொருள் உணர்ந்து அங்கணைந்து மேலேறி ஆதார சக்திகளின் ஸ்வரூப லட்சணங்களை அறிந்தாலன்றி அவர்கள் மேல் ஏறவிட மாட்டார்கள்.

5. முக மார்க்க அமுதுண்டு—மேலே யோய் அமிர்தம் உண்டு.

6. முட்டத் தேக்கி- அந்த அமிர்தத்தை உடல் எங்கும் தேக்கி.

7. முழுச் சோதி நினைத்திருந்த-பூரண பிரஞ்ஜ சமாதி பழகி அதில் தேறுதல்.

8. முதலாக வினைகளாக—நிருபாதிக நிலையாம் நிலையில்லா நிலையில் நிலைத்திருக்கும் பேறு பெறுவன.

இந்த எட்டுப் படிகளும் தாண்டியவர்கள் சித்தர்கள்.

இவ்வளவு சாதனங்களைச் செய்வதற்கு யோக முறை இல்லாத மற்றொரு வழியும் உண்டு. அதுவே ஸ்ரீவித்யை உபதேசம் அல்லது தீக்ஷை பெற்று, பாலா, பஞ்சதசி முதலிய மந்திரங்களை அக்ஷரலக்ஷம் ஜபித்து சித்தி பெறுவது.

இந்த சித்தி பெற்றவர்களுக்கு அணிமாதி சித்திகள் நிச்சயம் ஏற்படும். இந்த அணிமா, மகிமா, லகிமா, காமா, பிராப்தி, பிரகாம்யம், வசித்வம், ஈசித்வம் என்ற சக்திகள் ஸ்ரீசக்கரம் என்ற அம்பிகையின் சக்கரத்தின் ஆவரண தேவதைகளில் ஒரு சிலர்.

இவ்வளவு சித்திகளைப் பெற்றவர்களுக்கு கூடுவிட்டுக் கூடு பாய்வது ஒரு கஷ்டமா?

இக் கலையில் வெளியேறிய உயிருக்குப் பதிலாக மற்றொரு உயிர் உள்ளே புக வேண்டும். இந்த உயிர் என்பது என்ன?

உலகிலுள்ள பொருள்களைக் காட்சிப் பொருள் என்றும் கருத்துப் பொருள் என்றும் பிரிக்கலாம். உயிரைக் கண்ணால் காண முடியாது. ஆகவே அது காட்சிப் பொருள் அல்ல; கருத்துப் பொருள். உடல் இயங்கவும் தொழில் படவும் காரணமாக இருப்பது இதுவேதான்.

இந்த உயிரை ஆன்மா பசு என்று குறிப்பிடுவர். ஆன்மா உயிர்ப்பது எனப் பொருள்படும், கூடு விட்டுக் கூடு பாய்தலில் ஒரு ஜீவாத்மா காலி செய்த இடத்தில் இன்னொரு ஜீவாத்மா இடம் பெறுகிறது,

மக்களின் இருக்கையை வீடு என்பர். தவ முனிவர் இருக்கையை குகை என்பர். வீடு குகை இரண்டிலும் கூடு சிறியதாகும். மென்மையுடையதாகும். திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் உயிரைக் கூடு என்று உருவகம் செய்கின்றனர். உயிர் கூடு என்றால் அதில் உறையும் பொருள் ஒன்று வேண்டும், அதுவே இறை.

வீட்டிலே இருக்கில் என் நாட்டிலே போகில் என்
கூட்டில் வாள் சாத்தி நின்று உந்தீபற
ஊடப் படாதது என்று உந்தீபற

என்கிறது திருவுந்தியார்.

இம் மனதைக் கண்டித்து ஏகாக்கிரக சித்தத்தில் செல்லும்படி பழகுவதே யோகம். இதை பதஞ்சலி யோகம், 'சித்த விருந்தி நிரோதனம்' என்ற சூத்திரத்தால் குறிப்பிடுகிறது.

## சித்த மருத்துவம் 6

இறைவன் அருள்நூல் இனிதாம் வழிநூல்
துறைநன் முறையறிந்து தூய—நிறைவுடனே
ஆய்ந்துணர்ந்த சித்த மருத்துவத்தை ஆராய்ந்து
தேர்ந்துணர்வீர் வாழி திகழ்ந்து.

உலகிலுள்ள கலைச்செல்வங்களில் ஒரு வகை மக்களின் முயற்சியால் அறிந்து ஆராயப்பட்டவை. மற்றொரு வகை இறைவன், அவனையடைந்த தவப் பெருமுனிவர்களால் ஆக்கப்

பட்டவை. சித்த மருத்துவ நூல்கள் பின் கூறிய வகையைச் சேர்ந்தவை.

இறைவன், நந்தி, திருமூலர், அகஸ்தியர் மற்றும் சித்தர் களாலும் இவை இயற்றப்பட்டவை,

இவற்றின் தொகை ''துறை கோடி தொந்தங் கோடி'' என்பர், தமிழர்களின் அறிவியல் கருவூலமாக சாகாக் கலையின் பெருங் கலை நூல்களாக இலங்குபவை சித்தர் நூல்கள்,

திருமூலர், அகஸ்தியர் முதலிய சித்தர்கள், நிலத்தில் குளித் தும், நெடு விசும்பேறியும், நீர்மேல் நடந்தும், இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னுக்கியும் சாகா நிலையில் ''எண்ணிலி கோடி யுக மிருந்தேனே' என்று சொல்லும் வண்ணம் இருந் தார்கள்,

ரசம் என்னும் ஆதத்தை மணியாக்கி வாயில் ஒதுக்கிக் கொண்டு விண்ணில் பறக்கும் முறையை சித்தர்கள் நூல்களில் காணலாம். சித்தர்கள் விஞ்ஞானத்தில் மிக்க வல்லவர்கள்.

அகஸ்தியர் 'கமலினி' என்ற குளிகையின் துணையால் கடல் நீரைக் குடித்தவர். 'சுரபி' என்ற குளிகையின் உதவியால் உறிஞ்ச நீரை சுரக்கச் செய்தவர்.

இலக்க சௌமியா சாரம் என்ற நூல் மறைந்து விட்டது. சிவபெருமான் உமைக்கு போதித்தது இது. இறைவன் அரு ளால் அகஸ்தியர் இதை மீண்டும் பாடினர்.

அறுவை மருத்துவம் தமிழில் மேலோங்கி இருந்தது. 'உடம்பிடைத் தோன்றிற் றென்றை அறுத்ததன் உதிரம் ஊற் றிச் சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினுல் துயரம் தீர்வர்'' என்பது கம்பருக்குத் தெரியும்.

'வாளால் அறுத்து சுடினும் மருத்துவன்பால் மாளாக் காதல் நோயாளன் போல்' என்று கூறிய குலசேகரருக்கு அது தெரியும்.

''அகத்தியர் நயன விதி ஐநூறு'' என்ற நூலில் கண்ணுக்கு ஏற்படும் 96 வகை நோய்கள் பற்றியும் அவைகளைக் குணப் படுத்தும் வகைகளும் கூறப்பட்டுள்ளன.

அகத்தியர் அருளிய மருத்துவக் கருவிகள் இருபத்தாறின் இலக்கணமும் ஒவ்வொன்றின் நிறையும், அவற்றின் வடிவங் கட்குக் கூறிய உவமை வகைகளும் கற்போருக்குக் கலையின் நிலைமையை அறிவுறுத்தும். அகத்தியர் அருளிய பன்னீராயிரம் அச்சிடப் பெறுமல் சுவடியாகவே சிலரிடம் இருந்துவிட்டது.

இனி அது வெளிவருமோ என்று ஐயுற வேண்டியதிருக்கின்றது, திருமூலர் அருளிய எண்ணாயிரமும் வெளிவரவில்லை. மருத்துவச் சுவடிகள் ஆங்காங்கே தங்கியிருக்கின்றன, அவற்றையெல்லாம் அழிய விடாமற் பேணிக் காத்து அச்சிட்டுப் போற்றுவது அரசினர் கடமை எனினும் சைவ சித்தாந்தக் கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களின் ''நுண்மாண் நுழைபுல'ப் பேராற்றல் சிறிது உதவுமெனின் தமிழ் மருத்துவ நூல்களும் நல்ல முறையில் வெளிவந்து நிலைபெறும். உலகமெல்லாம் போற்றும் ஒப்பற்ற நூல்களைக் கல்லாதவர் களின் கையில் விட்டுவிட்டுக் கற்றோர் ஒதுங்கினர். அதனால் அவைகளிற் பல மறைந்தன. இப்போது உள்ள நூல்களும் பல நூற்றுக் கணக்கிலுள்ளன அவற்றையெல்லாம் ஆராய்ந்து நல்ல வழியிற் பயன்படுத்தல் வேண்டும். அகத்தியர் அருளிய ''பஞ்சகாவிய நிகண்டு'', ''போகர் நிகண்டு'' முதலிய நிகண்டுகளும் தமிழ்ப் புலவர்களைப் பாராமல் இருக்கின்றன.

சித்த வைத்தியம் அனாதி காலமாகவே இருந்து வந்திருக் கிறது.

மனிதனுக்கு வரும் பிணிகளைத் தீர்ப்பதற்கென தாவர தாது ஜீவ இனங்களைக் கையாண்டு நலமுறும் வழிகளை வகுத்துள்ளதே மருத்துவம் ஆகும். மருந்து மருத்து எனவாகி அதனைக் கொண்டு புரியும் செயல் மருத்துவமாயிற்று. மருத்துவம் என்றால் நோயை மறுத்தல் என்பதினின்றும் பிறந்த தாகவும் கூறுவர்.

இம் மருத்துவம் சித்தர்களால் பரவியதால் சித்த மருத்துவம் எனப் பெயர் பெற்றது.

ஸ்தூல உடல் என்பது ஏழு தாதுக்களால் ஏற்பட்டதாகும். ஜுரம், நீர் கோர்வை, வலி, கடுப்பு, சிரங்கு, அடி, குத்து, வெட்டுக் காயம், வெட்ப தட்ப மாறுதலினால் ஏற்படும் கேடு, பசி தாகம் ஆகிய உடற் பிணிகள் காணும், இதற்குத் தாவர சரக்குகளான சூரண, மாத்திரை, லேகியம், தைலம், குடிநீர் கருக்கு, மனப்பாகு முதலியவற்றால் நீரின் (அப்பு) துணை கொண்டு உடலில் கலக்கச் செய்து பிணிகளை நீக்க வேண்டும்,

ஸூக்ஷ்ம உடல் என்பது தசவாயு, தச நாடியிவான சராசர தத்துவ நிலையிலுள்ளதாகும் இதற்கு ஜன்னி, க்ஷயம், குஷ்டம், நீரிழிவி, வாதம், குன்மம் ஆகிய உயிர்ப் பிணிகள் காணும், இதற்கு இரச, பாஷாண, உலோகங்களினலான பற்பம், செந் தூரம், சுண்ணம் முதலியவற்றால் தேயு (அக்னி) வின் துணை

கொண்டு வாயு நாடிகளை சம்பந்தப்படுத்தி பெருநாடி நரம்பு மூலம் உடலில் பரப்பி பிணிகளை நீக்க வேண்டும்.

காரண உடல் என்பது பஞ்ச பூதங்களாலான அண்ட தத்துவ நிலையிலுள்ளதாகும். இதற்கு நரை, திரை, மூப்பு, பயம், சாக்காடு ஆகிய பிறவி நோய்கள் காணும். இதற்கு சிந்துவின் தன்மையிலான இரச கல்பம், மூலிகை கல்பம் முதலியவற்றால் நரை திரை மூப்பை நீக்கியும் ஆசனத்தினால் பிராண வாயுவின் துணைகொண்டு பயம், சாக்காடு இவைகளை வெல்ல வேண்டும்.

மனிதனுக்கு கிரமப்படி வாதத்தில் 30 பித்தத்தில் 33 கபத்தில் 37 ஆக மொத்தம் 100 வயதாகும். இந்த 100ல் 300க்குள் உடல் வளர்ந்து பின் முக ஒளி குன்ற ஆரம்பிக்கும் 40க்கு மேல் தேஜஸ் கெடும். 50க்கு மேல் உடல் தளர்ந்து மயிர் நரைக்கும். 60க்கு மேல் கண்ணொளி குன்றி நடை தளரும். 90க்கு மேல் பொறிபுலன் ஒடுங்கி 100ல் மரணமுண்டாகும்.

சரம் என்பது பிராண வாயுவின் இயக்கம். மூச்சு மூக்கு துவார வழியாகவே நடைபெறுவது. ஒரே சமயம் இரு துவாரங்களில் நுழைந்து வெளியேறாமல் ஒவ்வொன்றிலும் 5 நாழிகை வீதமே நடக்கும். அதுவும் திங்கள், புதன், வெள்ளிக்கிழமைகளில் இடது பக்கத் துவாரத்தில் காலை 4 மணிக்குத் தொடங்கி ஐந்து ஐந்து நாழிகைகளாக ஒவ்வொரு மூக்கு துவாரத்தில் மாறி மாறி நடக்கும். இப்படியே சனி, ஞாயிறு, செவ்வாய்க் கிழமைகளில் காலை 4 மணிக்கு வலது பக்கம் தொடங்கி ஐந்தைந்து நாழிகைகளாக மாறி மாறி நடைபெறும். இப்படியே வியாழக்கிழமைகளில் வளர்பிறையில் இடது துவாரத்திலும் தேய்பிறையிலும் மாறி மாறி நடக்கும்.

அஞ்சனம் போன்றுடலை யறுமந்தியில்
வஞ்சகவாத மறுமத் தியானத்திற்
செஞ்சிறு காலையிற் கொடியப் பித்தறும்
நஞ்சரச் சொன்னோம் நரை திரை நாசமே.

—திருமூலர்

யானை போன்ற உடலாயினும் கபம் வந்து அடக்குமானால் ஒரு செயலும் செய்ய முடியாது.

சாயங்காலம் யோகம் பயின்றால் கபம் அகலும்.

மத்யானம் பயின்றால் மாறுபாட்டைச் செய்யும். வாத நோய் அகலும்.

விடியற் காலையில் செய்தால் பித்த நோய் அகலும். செஞ் சிறு காலை என்பது நான்காம் ஜாமம். நஞ்சத் தன்மை உடலில் உள்ளது கழிக்கப்படும். இதனால் மூப்பின் அறிகுறியாகிய நரை திரையும் அகலும்.

சித்த மருத்துவத்திற்கும் மற்ற வைத்திய முறைகளுக்கும் முக்கியமான வேற்றுமை உண்டு.

மற்ற வைத்தியங்கள் மக்களுக்கு சாவு உண்டு என்று ஒப்புக் கொள்ளுகின்றன. சாகாமல் வாழ மருந்துண்டு என்பதை ஒப்புக்கொள்ளவதில்லை. ஆனால் சித்தர்களின் கொள்கை மக்கள் சாகாமல் (விரும்பியவரை) நீண்ட காலம் வாழலாம் என்ப தாகும், இதற்கான காயகற்பம், மருத்துகளையும், பயிற்சிகளை யும் சித்தர்கள் தங்கள் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

இந்தியாவில் மூன்றுவித மருந்துகள் (ஆயுர்வேதம், சித்தம், யூனானி) இருந்தாலும் டாக்டர்களிடம் என்னமோ பொது ஜனங்களுக்கு ஒரே வித அபிப்பிராயம்தான். டாக்டரை 'யம னின் சகோதரன்' என்றே அவர்கள் மதிக்கிறார்கள். யமராஜா உயிரை மட்டும் கொண்டு போகிறார். வைத்யராஜா உயிரை யும் பணத்தையும் கொண்டு போகிறார்.

வைத்திய உதவி ஒரு சிக்கலான விஷயம், நோயைக் குணப் படுத்துவது புண்ணியம். ஆனால் அதற்குக் கூலி கேட்பது பாவம். கூலி கேட்காமல் குணப்படுத்தினால் அற்புதமாக ஆத்ம மலர்ச்சி ஏற்படுகிறது, ஞானிகளும் சித்தர்களும் நோயை அருமையாகக் குணப்படுத்தும் சக்தியைப் பெற்றிருந் தார்கள்.

## வர்மாணி மருத்துவம்

வர்மாணி மருத்துவம் (Vamalrogy) என்ற முறை சித்த வைத்தியத்தில் உண்டு.

உடலிலுள்ள உயிரை தடை செய்து ஒடுக்குன்ற இடங் களுக்கு உயிர் நிலையங்கள் (Life Center) என்று பெயர். இது 96 தத்துவங்களுக்கு□ உள்ளடங்கியது,

இவ்வுயிர் நிலையங்கள் எலும்பு, நாளம், நரம்பு, சந்தி பந்தனங்கள் போன்றவைகளில் அந்தரங்கமாக நிலவுகின்றன. முட்டிகளில் அடிபட்டுவிட்டால் உயிர் போவதுபோல் வலி

---

□ இந்த 96 தத்துவங்கள் 'குண்டலினி சக்தி' என்ற பிரதிபா புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ளது.

ஏற்படுவதை உணர்ந்திருக்கலாம். இந்த அந்தரங்க இடங்களை 'மர்மம்' என்றழைத்து அதுவே 'வர்மம்' மாக மாறிவிட்டது.

இந்த வர்ம நிலையங்கள் பாதிக்கப்பட்டால் உடல் நிலை பாதிக்கிறது.

இந்த வர்மங்கள் பாதிக்கப்படுவதையொட்டி படு வர்மம், தொடு வர்மம், தட்டு வர்மம், கூண்டு வர்மம், குடோரி வர்மம் முதலியவை ஏற்படுகின்றன,

இது சம்பந்தப்பட்ட வைத்திய நூல்கள் இன்னும் சுவடி ரூபத்திலேயே இருப்பதாகத் தெரிகிறது. 'மணி நூல்' என்பதில் உடல் பாதி, உயிர் பாதி, உடலுயிர் பாதி நிலையங்கள், வர்ம விதானம், முறிவு, சாரி, வர்ம ரத்னம், வர்ம முறை முதலியவை விவரிக்கப்பட்டுள்ளன.

## மூலிகைகள் மகிமை

மூலிகைகள் பற்றி வேதம் கூறுவதாவது :

''மூலிகைத் தாயே நீ நூற்றுக் கணக்கான இடங்களில் (முல்லை முதலிய ஐவகை நிலங்களில்) பிறந்து வளர்ந்து வாழ்ந்து வருகிறாய். நீ ஆயிரம் வடிவங்களில்—புல், பூண்டு, மரம், செடி கொடிகளாக தோன்றுகிறாய். பல வழிகளில்—ஜுரம், வாந்தி, பேதி போன்ற நோய்களைக் குணப்படுத்துகிறாய். அடியேனைப் பிணியற்றவனாக ஆக்க வேண்டுகிறேன்.''

மூலிகைகள் நோயுற்றவனுக்குத் தாயுக்குத் தாயாக மருந்துக்கு மருந்தாக இருந்து குணப்படுத்துகிறது.

நம் நாட்டில் உண்டாகிற எல்லா புல் பூண்டு செடி கொடிகளும் அவற்றின் இலை, வேர்களும், பூ, காய், பழம், கொட்டை, பட்டை, இலை, நரம்பு, குருத்து இவைகளும் எல்லாமே மருந்தாக உபயோகிக்கப் பயன்படுபவையே, இம் மூலிகைகள் தட்ப வெப்ப நிலைகளுக்குகந்தவாறு அந்தந்த இடங்களின் நிலத்தின் தன்மை, மண் வளத்தைப் பொருத்து விளைகின்றன.

தாதுப் பொருட்களையும் பாடாண வகைகளையும் சரியான முறையில் பக்குவப்படுத்தி உபயோகித்தால் நன்மை தரும். இல்லையேல் விபரீதம் ஏற்படுத்தும். மூலிகைகள் அப்படியல்ல.

நம் முன்னோர்களும் சித்தர்களும் இம் மூலிகைகளால் ஏற்படும் நன்மை எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்று விரும்பியிருக்கிறார்கள்.

நமது சித்த மருத்துவர்கள் தேசபேத, மத பேதமில்லாமல் நமது மருந்துகள் தழைத்து ஓங்க வேண்டுமென்றே கருதியிருக்கிறார்கள். ஆனால் நமக்குத் தெரிந்த சில மூலிகைகள் வட நாட்டில் இருக்கின்ற இந்திய மருத்துவர்களுக்குக் கூடத் தெரிவது இல்லை. மொழி ஒரு தடையாக இருந்திருக்கலாம். என்றாலும் அந்த மொழிப் பிரச்னை கூட இந்த அளவுக்குத் தடையாக இருந்திருக்க முடியாது. உலகில் உள்ள பல தேசத்தினருக்கும், பல மொழியினருக்கும் நமது தமிழ் சித்த வைத்தியம் பரவ வேண்டும்.

## பிரமாணங்கள்

மனிதர்களின் மனம் காலப் போக்கிலும் மாறுபட்ட வளர்ச்சியினாலும் வேறுபடுகின்றது. ஏதாவது ஒரு காரியத்தை முடிவு கட்ட வேண்டுமானால் முற்காலத்திலும், இக்காலத்திலும் மூன்று விதங்கள் கையாளப்படுகின்றன. அவைகள்: 1. பிரதியக்ஷம் என்னும் நேர்முறை பரிசோதனை. 2. அநுமாணம் என்னும் காரிய காரணங்களை ஆராய்வது, இருப்பதை (கண்ணால் கண்டதை) கொண்டு இல்லாத (காணாத) ஒன்றைப் பகுத்தறிவின் உதவியால் ஊகித்தறிவது. உதாரணமாக நம் கண்களால் சிறிது தூரத்தில் மேலே செல்லும் புகையைக் காணுகின்றோம். உடனே பகுத்தறிவு அந்தப் புகை நெருப்பிலிருந்து கிளம்பியது என்று உணர்த்துகின்றது. எப்படியென்றால் நாம் முன்பு நெருப்புள்ள அடுப்பிலிருந்து புகை வருவதைக் கண்கூடாகக் கண்டு மனத்தில் பதிய வைத்திருந்தது இப்பொழுது நினைவு படுத்துவதால் அந்த இடத்தில் நெருப்பு இருக்கின்றது என்ற முடிவிற்கு வருகின்றோம். இது ஊகித்தல் எனப்படும். 3. ஆப்த வசனம் அல்லது முக்காலமும் அறிந்த யோகிகள், முற்றுந் துறந்த முனிவர்கள், சித்தர்களின் வசனம் இவைகளைக் கொண்டுதான் சாதாரணமாக முடிவு காண வேண்டும்.

## மூலிகையின் சிறப்புக்கள்

அறிவுசான்ற ஆன்றோர்களின் அமுத வாக்கில் அவ்வளவாக நம்பிக்கை வைப்பவர்கள் தற்காலத்தில் பெரும்பாலும் இல்லை. கண்கூடாகக் காண்பதைத்தான் பகுத்தறிவாளர்கள் நம்புகிறார்கள். அதற்கடுத்தபடியாக அனுமானத்தினால் நம்புகிறார்கள், ஆக இக்காலத்தில் விஞ்ஞான ரீதியாக என்றால் இரசாயன ஆய்வுக்கூடங்களில் ஒரு மூலிகையைப் பல விதமாக ஆராய்ந்து, அதிலிருக்கும் தாதுப் பொருள்கள் என்னென்ன, உப்புக்கள் யாவை? எந்தெந்த நோயுள்ளவர்களுக்கு எந்த முறையில்,

என்ன விகிதத்தில் எதனுடன் கலந்து கொடுக்க வேண்டும் என்பதுதான். இப்படிப் பிரிந்து உபயோகிக்கும் வழிகளைச் சொன்னால் இம்மூலிகைகளை சித்த வைத்தியர்கள் மட்டுமின்றி மற்ற வைத்தியர்களும் உபயோகப்படுத்தி பிணிகளால் பீடிக்கப்பட்டுள்ள மனித வர்க்கத்தைக் காப்பாற்ற முடியும்.

மேலும் சித்த வைத்தியம் மிக மிகப் புராதனமானது. மூலிகைகள் எக்காலத்திலும் பயன்படக் கூடுமென்று சித்தர்கள் அறிவித்திருந்தாலும் காலப் போக்கில் நாம் எந்த மூலிகையை எதற்கு அவர்கள் சொன்னார்கள் என்பதை அறியாமலிருக்க லாம். மூலிகைகள் காலத்தாலும், தேசத்தாலும், தட்ப வெப்ப நிலைகளாலும். மண்வள வேறுபாட்டினாலும் தமது குணங்களை யும், ஆற்றலையும் குறைத்தும் பெருக்கியுமிருக்கலாம்.

மேற் சொன்னவற்றைச் சில உதாரணங்களின் மூலம் விளக்குகிறேன்.

## ஒரே பெயரில் ஆறு மூலிகைகள்

நந்தமிழ் நாட்டில் மூத்திரக் கல்லடைப்புக்கு சிறப்பாக உபயோகிக்கும் மூலிகை சிறுபீளை என்பது. இதற்கு வடமொழி யில் பாஷாணபேதி என்று. பாஷாணபேதி என்ற பெயரில் மலையாளத்தில் வேறு பொருளையும், கன்னட தேசத்தில் வேறு பட்ட நான்கு மூலிகைகளையும், அதே பெயரில் அதே நோய்க்கு உபயோகித்து வருகின்றார்கள். இவ்வாறு ஒரே பெயரில் ஆறு மூலிகைகள் வெவ்வேறு பிரதேசத்தில் உபயோகித்து வருகிறார் கள். அந்த ஆறு மூலிகைகளும் ஒரே சமயத்தில் நோயைக் குணப்படுத்தக் கூடிய ஆற்றல் உண்டென்றாலும். அடிப்படை யான குணத்தில் ஏற்றத் தாழ்வு இருக்கத்தான் செய்யும்.

அதே போன்று வல்லாரை என்னும் மூலிகையைத் தமிழர் கள் உபயோகப்படுத்தும் முறை வேறு. மலையாளிகள் உபயோகப்படுத்தும் முறை வேறு. தமிழர்கள், மலையாளி கள் இருவரும் மூளை சம்பந்தப்பட்ட வியாதிகளில்தான் வல் லாரையை உபயோகிக்கின்றனர். இப்படி அநேக மூலிகைகள் மாறுபட்ட பெயர்களுடன் தற்காலத்தில் உபயோகப்படுத்தப் படுகின்றன. அவைகளை விஞ்ஞான ஆராய்ச்சியினால்தான் சரியான முறையில் அறிய முடியும். மேலும் சாத்திரங்களில் சொல்லி, வழக்கத்திலிராத சில குணங்களையும் நாமறியலாம். உதாரணமாக சர்ப்பக் கந்தா என்னும் மூலிகை காட்டு களாக் காயின் இனத்தைச் சேர்ந்தது. இதை நமது நாட்டினர் தூக் கத்திற்கு, மாத விடாயை அதிகமாக்குவதற்கு, பைத்தியத்திற்கு கொடுத்து வந்தார்கள், தற்கால விஞ்ஞான முறையில் அதை

ஆராய்ந்தபோது, அதிலிருக்கின்ற ''ரிசர்ன்'' என்ற ஒரு சத்து ரத்த அழுத்தத்தைக் குறைக்கின்றது என்று கண்டுபிடித்துள்ளார்கள். இக்காலத்தில் அந்த மருந்து இன்றியமையாதது; மிக அதிக அளவில் தேவைப்படுகிறது. இரத்த அழுத்தத்தின் ஆரம்பங்களை நமது முன்னோர்கள் அறிந்தோ, அறியாதோ இருக்கலாம். தற்காலத்தில் உலகமெங்கும் அவ்வியாதி பரவியிருக்கிறது. அதற்குக் காரணம் பலவாக இருந்தாலும், இம் மருந்து அதிகமாகத் தேவைப்பட்டு உபயோகப்படுத்தப்படுகிறது.

இதைப்போன்று பல மூலிகைகளை ஆராயத் தொடங்கினல் சித்த வைத்தியம் வளர்ச்சியடைவதுடன் பல நாட்டினரும் இதன் அருமையை அறிந்து உபயோகிக்கக் கூடியதாக இருக்கும். இந்த நோக்கத்துடன்தான் தமிழ்நாட்டில் சென்னை மாநகர் அடையாற்றிலிருக்கும் கேப்டன் ஸ்ரீநிவாசமூர்த்தி ரிசர்ச் இன்ஸ்டிடியூட் என்னும் ஆராய்ச்சிக் கழகம் துவக்கப்பட்டு ஆராய்ச்சி செய்து வருகின்றது. இதில் முக்கியமான இரண்டு மூலிகைகள் ஆராயப்பட்டிருக்கின்றன, ஒன்று இம்பூரல். மற்றொன்று தூதுவளை. இவைகளின் ஆராய்ச்சியைப் பற்றி சுருக்கமாக இங்கே கொடுக்கின்றேன்.

## இம்பூரல்

இந்த இம்பூரலைப் போன்றதே மற்றொரு செடி, சக்களந்தி செடி (Olden Landia Shuteria) என்று சொல்லப்படுகிறது. முன்னது அளவில் சிறியதாயிருக்கும். பின்னது அளவில் பெரியதாயிருக்கும். நாம் ஆராய்ந்தது அல்லது ஒல்டன் லேண்டியா அம்புலேடா என்னும் மூலிகையே, இம் மூலிகையை நம் முன்னோர்கள் வெகு காலமாகவே இருமல், சயம், சுவாசம் போன்ற சுவாசாசய ரோகங்களில் (Lungand upper Respiratory Pos) கொடுத்து பயன் கண்டிருக்கிறார்கள். மேலும் ரத்த பித்தம் என்னும் வியாதியில் (இரத்தம் கக்குதல், இரத்த வாந்தி, ரத்தம் மூத்திர மார்க்கமாகவும், ஆசன மார்க்கமாகவும் போதல்) கொடுத்து வருகிறார்கள். இது இந்திய வைத்தியர்களாகிய எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. வாத, பித்த, கப தோஷங்களின் மாறுதலாலும், இரத்த தாதுக்களின் கோளாறுகளாலும் வருகிற நோய்களை நமது மருந்துகள் எப்படி நீக்குகின்றன என்பதை மூலிகைகளின் சுவை, குணம், விபாகம் போன்றவைகளால் நாம் அறிகிறோம். ஆனல் இந்த தோஷ தாதுக்களின் நன்மையை அறியாதவர்கள் நமது மூலிகைகளை உபயோகிக்க

முடியாது. அவர்களும் உபயோகிக்க வேண்டுமானால் இந்த மூலிகையில் என்னென்ன ரசாயன சத்துக்களும் உப்புச் சத்துக் களும் அடங்கியிருக்கின்றன, அவைகள் உடலில் எந்தெந்த பாகத்தில் வேலை செய்கின்றன, எந்தெந்த நோய்க் கிருமிகளைத் தாக்கி உடலிலிருந்து வெளியேற்றுகின்றன என்பதை பிரத்தி யட்ச பூர்வமாக சோதிக்க வேண்டியிருக்கிறது. அப்பொழுது தான் நம்பிக்கையுடன் மற்றவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

## பச்சிலை மகிமை

''யாவர்க்குமாம் இறைவர்க்கொரு'' என்கிறார் திருமூலர். பச்சிலையால் பரமன் அருள் பெறலாம் என்பதைக் காட்டியவர் கண்ணப்பர்,

> பச்சிலை க்கும் வாய்க்குள்
> எச்சிலுக்கும் வீக்குப்
> பைச்சீலைக்குமாட்கொள் அரன்வாழ்வே

என்கிறார் அருணகிரிநாதர்.

இறைவன் உள்ளும் புறமும் இருக்கிறான். வெளியேயுள்ள இறைவனைப் பச்சிலையால் அர்ச்சிப்பது போல உடம்பினுள் இருக்கும் இறைவனையும் பச்சிலையால் மகிழச் செய்ய வேண்டும் பச்சிலையால் உடலும் உணர்வும் நலம் பெறும்.

சிவபெருமானுக்கு கண்ணில் ரத்தம் வந்தபோது கண்ணப்பர் சில பச்சிலைகளைப் பிழிந்து அவர் கண்களில் விட்டார் என்று சொல்லப்படுகிறது.

சென்னிமலையில் கோவில் கொண்டுள்ள முருகனை தரிசிக்கச் சென்ற ஒரு பக்தர் வழியில் காணப்பட்ட சாது ஒருவரைக் கண்டு வணங்கினார். தினமும் அவரை அங்கே சந்தித்த பக்தர் ஒரு நாள் ''சுவாமி நீங்கள் இங்கேயே இருக்கிறீர்களே. கீழே ஊருக்குள் வந்து பசியாறலாமே'' என்றார்.

''எனக்கு இங்கே ஒரு குறையும் இல்லை. இங்கேயே உணவு கிடைக்கிறது'' என்றார் சாது.

''இங்கு என்ன கிடைக்கும்?''

''எது கிடைத்தாலும் உண்பேன்'', பக்தர் ''அப்படியா சுண்ணாம்புதான் கிடைக்கிறது, அதைக் கூட உண்பீரா?'' என்றார் வேடிக்கையாக,

''அப்பனே சுண்ணாம்பு கொண்டு வா'' என்றார் சாது, மலையிலிருந்து கீழிறங்கிச் சென்று கொஞ்சம் சுண்ணாம்பு கொண்டு வந்தார்.

சாது சில பச்சிலைகளைப் பறித்து வந்து சுண்ணும்பின் மீது பிழிந்தார், பொங்கி அடங்கியது, அதை உண்ணத் தொடங்கினர்.

சுண்ணும்பாயிற்றே, சுவாமி வாய் வெந்து போகுமே என்று துடித்தார் பக்தர்,

இது முன்பு சுண்ணும்புதான், ஆனல் இப்போது வெண்ணெய் ஆகிவிட்டது, இந்தா நீயும் சாப்பிடு என்று கொடுத்தார் சாது.

இம்மாதிரி எவ்வளவோ பச்சிலைகள் உண்டு அவைகளின் மகிமை தெரிந்த சித்தர்கள் உண்டு. ஆனல் அதன் விவரங்கள் எல்லாம் மூடுமந்திரமாகவே போய்விட்டன. சித்தர் வழிவந்த சில மருத்துவர்கள் மூலம் தெரிந்தால்தான் உண்டு.

இப்படி சித்தர்கள் மூடி மறைத்ததை வள்ளலார்

சந்தோட சித்தர்தம் தனிச் சூதுங்காட்டி
சாகாத நிலைகாட்டிச் சகசநிலை காட்டி
வந்தோடு நிகர்மனம் பொய்கரைந்த இடம்காட்டி
மகிழ்ந்தருளிச் செய்தனை நின்வன்மை எவர்க்குளதே

என்கிறர்.

காட்டு வாகை, அத்தி, சமீ மாதுளை இவைகளை நெய்யுடன் பாகம் செய்து உண்டால் 15 நாள் பசி தோன்றுது. ஊனை வளர்க்காமல் உயிரை வளர்க்க வழிகாட்டும் சித்தர்களது சித்தி நமக்குக் கிட்டினல் நமது பிறவி சித்தி பெறும்.

## சித்த குளிகை

உடலுக்கு தீங்கு வராமலிருக்கவும், நடந்து செல்லும் காலத்தைக் குறுக்கவும் சில வழிகள் கூறப்படுகின்றன. உணவில் பிரயோகம் செய்யப்பட்ட விஷம் நீங்க ஒரு வகை குளிகை (சில பொருள் சேர்க்கையால் மாத்திரை போல் செய்து அமைப்பது)

ஹிமாலயத்திலுள்ள மஹர்ஷிகள் இந்தக் குளிகைகளைக் கரத்திலேந்தி மனைவிமக்களுடன் ஆகாய மார்க்கமாக ஹரித்வாரம் வந்து ஸ்நானம் செய்து செல்வதாக உத்தரஸ்காந்தம் கூறுகிறது.

லாக்ஷாப்ரியம்கும் ஜிஷ்டாஸம்கா ஸஹரேணுகா :
ஸயஷ்டி-ஆஹ்லமதூபேதா: பப்ருபித்தேந கல்கிதா;
நிக்நேக்தோ விஷாணஸ்தா: ஸப்பராத்ரே மஹீதலே
தத: க்ருத்வா மணிம் ஹேம்நா பத்தம் ஹஸ்தேந தாரயேத்
ஸங்ஸப்ருஷ்ட: ஸபிஷஸ்தேந ஸப்தே பவதி நிர்விஷ:

மந்த்ரம், யோகம் இவை விஷத்தை அகற்றவும். ஆகாய மார்க்கமாகச் செல்லவும் சாதனமாவது போல், சித்த குளிகை யும் ஒரு சாதனம் என்று இங்கே கூறப்படுகிறது. சத்துருக் களின் பிரயோகத்தைத் தடுக்க அவசியம் அரசர் இதை அணிய வேண்டும் என்கிறார் பராசர முனிவர். புரோஹிதர் மூலம் இதை மந்திரியே செய்ய வேண்டும். அமாத்ய ராக்ஷஸனது தூண்டுதலால், மருந்தில் விஷம் கலந்து வைத்தியர் சந்திரகுப்த னுக்குத் தந்தார். சாணக்கியர் அதை உணர்ந்து அந்த மருந்தினைக் கொண்டே கொடிய வைத்தியனைக் கொன்றார் என்று முத்ராராக்ஷஸ நாடகம் கூறுகிறது.

## விஷப் பூச்சிகளை அகற்றும் தூபம்

'விஷ ஜந்துக்களை ஏன் படைத்தார் பகவான்?' என்ற கேள்விக்குப் பதிலுரைப்பதைவிட, மனிதனுகப் பிறந்து ஸாத்துவிக குணங்களை விட்டு, ஸ்வதர்மத்தையும் விட்டு, தமோ குணம் வாய்ந்தவரை. ராக்ஷஸனைவிடக் கடின மானவரைத் தேள், பாம்பாகவும். அதில் கொஞ்சம் பாவம் செய்தவரைக் கொசு, மூட்டைப் பூச்சிகளாகவும் படைக்கிறார். என்பதே பொருத்தமாகும். அந்தப் பீடையை அறிந்துகொள்ள அறிவையும் ஆகம புராணுதிகளையும் தந்துள்ளார் பகவான், சில தூபங்கள் இவைகளை அருகே அணுகவிடாமல் செய்வ துடன் பூதப் பிரேத பிசாசாதிகளையும் அகற்றுகிறது என்கிறது புராணம்.

ஸந்துஸர்ஜரஸோசீர ஸர்ஷபாபத்ரவால்வகை :
ஸவேல்லா ருஷ்கரபுரை: குஸீமைராஜுநஸ்ய
தூபோ வாஸோ க்ருஹே ஹந்தி விஷம் ஸ்தாவரஜங்கமம்
நதத்ர கீடா ந விஷா தர்துரா ந சரீஸ்நபா:
ந க்ருல்யா கர்ம நாந்யச்ச தூபோயம் யத்ர தஹ்யதே

விஷமளிக்க வருபவன், ஆபிசாரப் பிரயோகம், சூனியம் முதலியன செய்பவனது லக்ஷணம் இத்தகையது என்று கூறு கிறார்.

ஸாந்த்ர ஸத்வா ச வயஸா வித்யஹ்கதா ச ம்ருத்திகா
த யா நுலிப்தம் யத்வேச்ம நாந்கிநா தஹ்யதே திவ்தஜ

## தீப்பிடிக்காமலிருக்க

மேற்கூறிய (எளிதில் நமக்குப் பொருள் விளங்காத) சில வஸ்துக்களின் சத்தைக் கரைத்துச் சுண்ணும்பு அடிப்பதுபோல் வீட்டில் பூசினல் வீட்டில் தீப்பிடிக்காதாம்.

## ரஸவாதக் கலை

கல்லை வைரமணியாக்கல், செம்பை கட்டித் தங்கம் எனச் செய்தல் புல்லை நெல் எனப் புரிதல் என விந்தை தோன்றியதின் நாடு.

—பாரதியார்

செம்பை தங்கமாக்க முடியுமா? முடியும். அதுதான் ரஸ வாதம். ரஸவாதமும் முதுமையைத் தவிர்க்கும் காயகல்ப முறையும் சித்த வைத்தியத்தில் மிகவும் முக்கியத்துவம் பெறு கின்றன.

உழவனிடமிருந்து மடாதிபதிகள் வரையில், சாதாரண பிரஜையிலிருந்து சக்ரவர்த்திகள் வரை எல்லாரும் பசி, தாகம், தூக்கம் இவைகள் எல்லாவற்றையும் மறந்து ஆர்வம் காட்டி யுள்ளனர் இக்கலையில்.

சம்பந்தர், திருநாவுக்கரசர் போன்றவர்கள் செம்பைப் பொன்னாக்கி அதைக் கொண்டு அடியார்களுக்கு அன்னதானம் செய்திருக்கிறார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் விருத்தாசலத் தில் ஒரு செங்கல்லைத் தங்கமாக மாற்றினர் என்று புராணம் கூறுகிறது.

சித்தர்களுக்கு இது ஒரு விளையாட்டு போன்றது.

மூங்கில் இலைச் சாற்றைத் தண்ணீர் விடாமல் பிழிந்து பழுக்கக் காய்ச்சின இரும்பில் ஊற்றினல் தங்கமாகிவிடுமாம், இதைச் செய்து எல்லோரும் பணக்காரர் ஆகாமல் இருக்க ஒரு முனிவர் மூங்கில் இலையிலிருந்து சாறே வராமலிருக்க சபித்து விட்டாராம். மூங்கில் இலையை எப்படிப் பிழிந்தாலும் ஒரு சொட்டு சாறு கூட வராது.

ரசவாதம் சாத்யம் என்றவர்களை 1919 வரை உலகம் பரிகாசம் செய்து வந்தது. இந்த ஆண்டில் ரூதர் போர்டு என் பவர் ஒரு பொருளை இன்னொரு பொருளாக மாற்றலாம் என்று நிரூபித்தார், இந்த உண்மையின் அடிப்படையில்தான் 25 ஆண்டுகளுக்குப் பின் அணுக்குண்டு பிறந்தது.

இந்நாட்டில் ரசவாதம் பல மூலிகைகளைக் கொண்டு செய் யப்பட்டு வந்திருக்கிறது. ஆதிகாலத்தில் இமய மலைச் சாரலில் மேயவிடப்பட்ட சில மாடுகளின் காலில் அடிக்கப்பட்டுள்ள லாடங்கள் அவை மேய்ந்து திரும்பிய பின் தங்கமாக மாறி இருப்பது கண்டு அதிலிருந்து இரும்பைத் தங்கமாக்கும் சில மூலிகைகள் உள்ளன என்று கண்டுபிடிக்கப்பட்டது.

மேலும் சித்தர்கள் அனுபவ முறையில் திருவோண நக்ஷத்திரத்தில் சுத்த ஜலத்தில் குளித்து அன்று பௌர்ணமி நிலா சமயத்தில் 'சித்திரகப் புல்லுருவி' என்ற மூலிகையைப் பறித்து, வாலுளுவை என்ற தைலத்தைவிட்டு அரைத்து தாமிரத் தகட்டில் தடவி புடம் போட்டால் தங்கமாகுமாம். முப்பூ என்ற மூலிகைக்கும் இத்தகைய குணம் உண்டாம்.

இந்த ரசவாத வித்தையை எப்படியும் கண்டுபிடிக்க வேண்டும் என்று அராபிய விஞ்ஞானிகள் முயன்றனர். இதன் பயனாக ரசாயன சாஸ்திரம் வெகுவாக முன்னேறியது. ஆனால் அவர்கள் ரசவாதத்தில் வெற்றி பெற முடியவில்லை.

பிற்கால விஞ்ஞானிகள் ரஸவாதம் என்பது முடியாத வித்தை என்று எண்ணி அதைக் கைவிட்டனர். ஜலவாயு முதல் உரேனியம் வரையிலுள்ள 92 விதமான தனி அணுக்களால் தான் இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இவ்வணுக்களே பொருளின் எல்லை. ஒரு அணுவை மற்றொரு அணுவாக்க முடியாது; இரும்பு அணுக்களைத் தங்க அணுக்களாக்க முடியாது. இது விஞ்ஞானிகள் முடிவு. ஆனால் பிராண வாயு அணு ஒன்றையும் ஜல வாயு அணு இரண்டும் சேர்த்து உண்டாகும் கூட்டணுவே தண்ணீரின் மூலகமாகும். இதைப் போல ரசவாதமும் சாத்தியமாக இருந்திருக்கலாம் என்ற எண்ணத்திற்கு இப்போது வந்துள்ளனர்.

இக்கால அணுசக்திக் கண்டுபிடிப்பே ரஸவாதக் கலைதான்.

அணுவின் மத்தியில் அணுத் தூள்கள் இருக்கின்றன. மத்தியில் இருப்பவைகளை புரோட்டான் என்கிறார்கள். அணுவின் மத்தியில் எத்தனை புரோட்டான்கள் உள்ளனவோ அதைச் சுற்றி வட்டப் பாதையில் எலெக்ட்ரான்கள் ஓடி வருகின்றன. அணுவின் மத்தியில் புரோட்டான்களுடன் நியூட்ரான் என்ற துகள்களும் இருக்கின்றன.

ஒரு பொருள் செம்பாகவும், இன்னொன்று தங்கமாகவும் மற்றொன்று கரியாகவும் இருப்பதன் முக்கியக் காரணம் அதிலுள்ள புரோட்டான்களின் எண்ணிக்கையே. செம்பின் அணுவில் 29 புரோட்டான்களும் தங்கத்தின் அணுவில் 79 புரோட்டான்களும் இருக்கின்றன. புரோட்டானின் எண்ணிக்கையில் உள்ள வேறுபாடே ஒன்றைச் செம்பாகவும் மற்றதைத் தங்கமாகவும் மாற்றுகிறது.

அணு ஆராய்ச்சியிலிருந்து அறிவு விரிவடைந்துள்ளது. ஒரு பொருளை இன்னொரு பொருளாக மாற்றலாம். ஹைட்ரஜன் என்ற பொருள் ஹீயம் ஆக மாறும்போது வெளியாகும் சக்திதான் அணுக்குண்டின் சக்தியாகும்.

இந்த வித்தையை நம் முன்னோர்கள் ஏற்கனவே உணர்ந்திருந்தனர்.

சரீரத்தில் உள்ள ஒவ்வொரு அணுவும் எப்போதும் உற்பத்தியாகியும் அழிந்தும் போவதாலேயே உடல் அழியும் தன்மை (சரீரம்) யானது என உணரப்பட்டது. அப்படி இத்தேகம் அழியாமல் பல்லாயிரம் ஆண்டு கூட வாழலாம் என்பதை சித்தர்கள் அறிந்திருந்தனர். இதுவே கட்டுவேத (காயகல்ப) முறை என அழைக்கப்படலாயிற்று.

தேகத்தில் ஒரு அங்கம் அல்லது பகுதி திடப்பட்டு மற்றொரு அங்கம் அல்லது பகுதி திடப்படாவிடில் அழிவு ஏற்படும். ஆகவே உடம்பிலுள்ள ஒவ்வொரு அணுவிலும் ரசத்திற்கு சக்தி ஏற்படுத்துவது அவசியமாகிவிட்டது.

இந்த நோக்கம் ஈடேற தாது வாதத்தில் ஆராய்ச்சி செய்தார்கள். சரீரத்தின் ஒவ்வொரு அணுவிலும் ரசம் பரவியுள்ளதா என்பதை பரீக்ஷிப்பது எளிதல்ல. ஆகவே செயற்கை முறையில் வேறு பரீக்ஷை செய்தார்கள். அதாவது தாமிரம், ஈயம் போன்ற தாதுப்பொருள்கள் ஒவ்வொன்றும் அதனதற்கே இன்றியமையாததான இயற்கை குணங்களையும் அமைப்பையும் அதன் ஒவ்வொரு அணுவிலும் காட்டவல்லன. இவ்வித உலோகங்களின் அமைப்பையும் குணங்களையும் மாற்றுவதென்றால் அது அவ்வுலோகங்களின் இயற்கையான சேர்க்கையையும், தன்மையையும் மாற்றும் வகையில், ஒவ்வொரு அணுவிலும் மாறுதல் வேண்டும். இவ்வித உலோக மாற்று முறையே அணுபேதம் எனப்பட்டது. இதுவே பின்னர் ரஸவாதம் ஆயிற்று.

ரஸவாதம் பற்றிய ஒரு சித்தர் பாடல்.

வாதமாம் வெடியுப்பு சுண்ணத்தை
வகையாக உற்றுமே பார்த்த பேர்க்கு
நாமமாம் பூ நீரை விட்டாயானால்
நலமானப் பயனில்லை நாடிப் பாடு
தாதாம் இவை இரண்டாம் வாதமாக்கி
கல்லென்று விட்டாக் கால் எல்லாம் போக்கி
நீதமாக துருசுதனை நீற்று விட்டால்
நிலைக்காது வாதமுதல் நீராய்ப் போச்சே

வாதம்தான் செய்யும் வகை அருமையில்லை
வாய்த்திரந்து பாராமல் வழலைப் பாடு
நீதம்தான் தவறினல் வாதமில்லை
நெறியை யுற்று பெருமையாய் பண்ணைக் கொன்று
வேதிலுள்ளபடி சொல்லி விட்டேன்
வேதாந்தம் சித்தாந்தம் இரண்டும் ஒன்று
நீதமாய் செய்தாக கால் பலனம் ஆகும்
நிகழ்கால மெல்லாந் தூவிப் பதமுமாமே.

சித்தர்கள் தங்கள் பார்வையாலேயே ரசவாதம் செய்யும் வித்தையைப் பெற்றிருந்தார்கள் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

நோய் நாடல் நோய் முதல் நாடல் இவைகளில் சித்த முறையில் சில தனித் தன்மைகள் உள்ளன. நாடி பார்ப்பதிலும் ஒரு சிறப்பான தனி முறை பின்பற்றப்பட்டு வருகிறது. மூலிகைகளைவிட தாது உப்புகளில்தான் சித்தர்களின் கவனம் அதிகமாக சென்றிருக்கிறது. விஞ்ஞான பூர்வமான சோதனை களை அதற்கான கருவிகள் எதுவும் இல்லாமல் மனித உடலில் உய்த்து உணர்ந்து அவற்றைக் குணப்படுத்தும் பத்திய முறை களை சித்தர்கள் கண்டுபிடித்திருந்தார்கள்.

பண்பாடு மிக்க சமூகம் இயற்கையாகவே ஒரு வைத்திய முறையை அதன் தேவைக்குப் பெற்றிருக்கும். சித்த மருத்துவம் அப்படிப்பட்டது. மருத்துவத்தில் யோகம், தவம் மூலம் குறிப் பிட்ட சாதனைகளைச் செய்தவர்கள் சித்தர்கள்.

## காலனை வெல்ல தேரையர் கூறும் வழி 7

"நோயற்ற வாழ்வு நான் வாழ வேண்டும்" என்று பாடினர் வள்ளலார் ராமலிங்க சுவாமிகள்.

இந்திரியங்களுக்கு அடிமையாகாமல் இருந்தால் நிச்சயம் நோயற்ற வாழ்வு வாழ முடியும், இந்திரியங்களுக்கு அடிமை யானல் உடலும் கெடும் மனமும் கெடும்.

சுகாதார விதிகளை சிறிதும் வழுவாது பின்பற்றினல் காலனை விரட்ட முடியும் என்கிறர் தேரையர் என்கிற சித்தர்.

"நோய்க்கு இடங் கொடேல்" என்பது ஔவை வாக்கு.

இதற்கு உரையாசிரியர் உணவு முதலியவற்றல் நோய் ஏற் பட இடம் கொடுக்காதே என்கிறர். உணவை மிதமாக உண்.

சத்தான உணவை அருந்து. சரி "முதலியவற்றால்" என்ற சொல் எதைக் குறிக்கிறது? இதற்கு தேரையர் விளக்கம் தருகிறார்.

திண்ண மிரண்டுள்ளே சிக்கவடக்காமற்
..........................................உண்ணுங்கால்
நீர் சுருக்கி நெய் உருக்கி மோர் பெருக்கி உண்பவர் தம்
பேர் உரைக்கிற் போமே பிணி.

மல மூத்திரங்களை அடக்கக் கூடாது. உண்ணுமிடத்தில் நீரைக் காய்ச்சி, மோரை விளாவி, நெய்யை உருக்கி உண்பவருக்கு நோய் வராது.

பாலுண்போம் எண்ணெய் பெறின்
வெந்நீரிற் குளிப்போம்
...... இளம் வெய்யில் விரும்போம்
இரண்டடக்கோம் ஒன்றை விடோம்
இடது கையிற் படுப்போம்
மூலஞ்சேர் கறி நுகரோம் மூத்த தயிருண்போம்
முதநாளில் சமைத்த அமுதெனினும் அருந்தோம்
ஞாலத்தான் மடைத்திடினும் பசித்தொழிய உண்ணேம்
நமனார்க்கு இங்கேது சுவை?

இரண்டடக்கோம் - மல மூத்திராதி காயிக வேகங்களை அடக்க மாட்டோம்.

ஒன்றை விடோம் - (காமக்ரோதாதி) மனோ வேகத்தை அடக்கி விடுவோம்.

மூலஞ்சேர். .நுகரோம் - மூல ரோகத்தை உண்டாக்கும் இயல்பு பெற்ற வறட்சி மிக்க உணவுகளை புசிக்க மாட்டோம். தயிரை உண்பதாயின் புளித்த தயிரையே உண்போம்.

உண்பதிரு பொழுதொழிய மூன்று பொழுதுண்ணேம்
உறங்குவது இராவொழிய பகலுறக்கம் செய்யோம்
மண்பரவு கிழங்குகளில் கருணையன்றி புசியோம்
வாழையிளம் பிஞ்சொழியக் கனியருந்தல் செய்யோம்
பெருந்தாகம் எடுத்திடினும் பெயர்த்து நீர் அருந்தோம்
நண்பெற வுண்டபின்பு குறுநடையுங் கொள்வோம்
நமனார்க்கிங் கேது சுவை.,,

ஒரு வேளை உண்பவன் யோகி
இரு வேளை உண்பவன் போகி
மூன்று வேளை உண்பவன் ரோகி.

நம் உடலின் முக்கிய பாகமான மூளை தலையில் உள்ளது. இத்தலையினில் அமுதம் பிறக்கிறது. தலையைப் பாதுகாக்கவே மயிர் இருக்கிறது. குழந்தைகள் தலை உச்சியில் விளக்கெண்ணெய் தடவுவார்கள்.

இந்த உச்சந் தலைக்கு அதிக உஷ்ணமோ அதிக குளிரோ படுவது கூடாது,

மனித உடலிலுள்ள ரத்தத்தில் ஓர் அளவு நீர் கலத்துள்ளது அந்த நீர் வறண்டு விட்டால் ரத்தம் உறைந்து ரத்தம் கட்டி உயிருக்கே ஆபத்து ஏற்பட்டுவிடும். தலையில் எண்ணெய் தேய்த்து குளிப்பது நம் நாட்டிலுள்ள வழக்கம். தேரையர் என்ன சொல்கிறார் பார்ப்போம்.

ஆறுதிங்கட் கொருதடவை வமன மருந்தயில்வோம்
அடர்நான்கு மதிக்கொரு காற் பேதியுறை நுகர்வோம்
தேறுமதி யொன்றரைக் கோர்தரம் நசியம் பெறுவோம்
திங்களரைக் கிரண்டு தரஞ் சவரம் விரும்பிடுவோம்
வீதுசதுர் நாட்கொருகால் நெய்முழுக்கைத் தவிரோம்
விழிகளுக்கு அஞ்சனம் மூன்று நாட்கொரு காலிடுவோம்
நாறுகந்தம் புஷ்பமிவை நள்ளிரவில் முகரோம்
நமனார்க்கிங் கேதுசுவை நாமிருக்குமிடத்தே,

ஆறு மாதத்திற்கு ஒரு முறை வாந்தியாகும்படியும் நான்கு மாதத்திற்கு ஒரு முறை பேதியாகும்படியும் மருந்துண்போம். நான்கு நாட்களுக்கு ஒரு முறை எண்ணெய் ஸ்நானம். மூன்று நாட்களுக்கு ஒரு முறை கண்களுக்கு மை இடுதல். கஸ்தூரியையும் புஷ்பங்களையும் இரவில் நுகரக் கூடாது.

பசு நெய் தேய்த்து ஸ்நானம் செய்வது மிகவும் விசேஷம். அல்லது நல்லெண்ணெய் மிகவும் நல்லது.

பருவங்கள் மாறுவதும் அதன் காரணமாக வெயில், காற்று, தண்ணீர் தன்மை இவை மாறுவதும் இயல்பு—இயற்கையின் வழி இவ்வித மாற்றங்களால் தேசம், காலம், ஜலம், காற்று இந்நான்கும் அனாரோக்யமானவைகளாக மாறும். அவைகளிலிருந்து நோய் வராமல் காப்பாற்றிக் கொள்ளவே இம்முறைகள்.

பகத்தொழுக்கு மாதாயாங்கந் துடைப்பமிவை தூட்
பட நெருங்கோம், தீபமைந்தர் மரநிழலில் வசியோம்
,..... துஞ்சலுண விருமலம்......அழுக்காடை
வகுப்பெடுக்கிற் சிந்துகசம் இவை மாலை விடுப்போம்
வற்சலந் தெய்வம் பிதுர் சற்குருவை விடமாட்டோம்

நகச்சலமு முனைச்சலமுந் தெறிக்குமிட மணுகோம்
நமனூர்க்கிங் கேது சுவை....

மாதவிலக்காகியுள்ள ஸ்திரீகள் மேல் பட்ட வீசும் காற்று விளக்குமாறு வீச்சின் எதிர்ப்புறம், தூசி இவை நம்மேல் படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இரவில் தீபத்தினடியில் விழும் நிழல், மனிதர் நிழல், மரத்தினடி ஆகிய இடங்களில் இருத்தல், புசித்தல், உறங்கல் செய்யக் கூடாது. கன்றோடு கூடிய பசு, தெய்வம், பித்ருக்கள், குரு இவர்களை மாலை நேரத்தில் வழிபட வேண்டும்.

# போகர் காட்டிய அற்புதங்கள் 8

## சீனபதியில் குதிரை இல்லாமல் ரதம் ஓட்டியது

விஞ்ஞான வழியிலே உலகம் முன்னேறி வந்துகொண்டிருக்கிறது. ரயிலும் மோட்டாரும் 'டாங்கி'யும் நீராவிக் கப்பலும் நீர்மூழ்கிக் கப்பலும் அதிசயங்கள் என்ற காலம் போய்விட்டது. அணு ஆயுதங்கள் கூடப் பழமை பெற்று வருகின்றன. நம் நாட்டில் பழங் காலத்திலே சித்தர்கள் பலர் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவரான போகர் சிந்தையிலே இந்த அற்புதங்கள் எல்லாம் விஞ்ஞான ஆராய்ச்சியை முந்திக்கொண்டு வளர்ந்திருக்கின்றன. அவர் ஓட்டியதாகச் சொன்ன புகை ரதம், நீராவிக் கப்பல், 'பலூன்' முதலியவற்றைச் செய்த முறைகளைப் பாடல்களாக வர்ணித்திருக்கிறார்.

பாரேதான் ராஜாதி ராஜர்மெச்சப்
    பாரினிலே அச்வம் இல்லா வண்டி யோட,
நேரேதான் சக்கரமும் ஆறதாகும்
    நெடிதான இரிசியது மூன்றதாகும்;
கூரேதான் குறுக்கவட்டம் எட்டதாகும்
    குறிப்புடனே வடிவட்டம் நாலதாகும்,
தேரேதான் அடிவட்ட மூட்டிக்கொண்டு
    திறமான மேல்வட்டம் பூட்டக்கேளே.

பூட்டவே விசிறியது விட்டங்கொண்டு
    புகழான சுள்ளாணி இரும்புமாட்டி,
மாட்டியதோர் இரும்புக்கு வளையமிட்டு
    மார்க்கமுடன் சுற்றுப்புறம் கம்பிமாட்டி,

நீட்டமுடன் நாற்சதுர மத்திவட்டம்
நெடியதொரு குழலொன்று முனையில்வைத்து,
வாட்டமுடன் மத்தகளும் தலையுண்டாக்கி
வளமுடனே தலைகுழையில் சில்லுபோடே.

சில்லுதனை எடுத்துமிகப் பூட்டிப் பார்க்கச்
சிறக்கவே மரைகொண்டு திருவல்பூட்டிப்,
பல்லுடனே சக்கரத்தில் திருவுபூண்டு
பக்கமிகு புறமுமட்டும் குழைகள்விட்டு,
மல்லுடனே மல்லணிந்து குழைசிபோட்டு
மல்லினது மேற்புறத்தில் குழைகள் நிற்க,
நெல்லுபோல் தகடதனை உருவாசெய்து
தேர்வட்டம் போலாகத் தெரியப்பூட்டே.

பூட்டுகையில் வில்லாணி கள்ளாணியப்பா
புகழான நடுசட்டம் திருகுசட்டந்தானும்,
தாட்டிகமாம்க் கயிறுபோலத் திருகுகம்பிமாட்டி
சட்டங்களில் மூன்றுவட்டப் பிறைபோலுண்டாக்கி
நீட்டமுள்ள கெஜநூறுவண்டி ரதம்போல
நெடிதான சட்டமது அளவுடனே மாட்டு,
காட்டவே அகலமது கெஜமுப்பதாகம்
கருணையுடன் அங்குலங்கள்வரை தப்பாமாட்டே.

தப்பாமல் மாட்டையிலே தேர்கொண்ட சூட்சம்
தாரணியில் போகுதற்குச் சட்டமுடன் கூட்டு,
ஒப்பமுடன் காலில் ஒருபக்க மிகவாணி
ஓங்கு புகழாணியிலே திருவல் மிகமாட்டி,
செப்பமுடனடி வாரக்குழை தனிலேசில்லு
சீராகத் தானமைத்துக் கழுத்துக்கட்டைமாட்டி
நெப்பமுடன் சிம்மாடு கட்டைதனில் மத்தி
நேராகத்திருவலது சொருவல் மிகப்பூணே

பூணவே நெடுங்கம்பி ஆறுவகைச் சட்டம்
பூட்டியதோர் கம்பிகளில் ஆறுவகைக் குறுக்கு,
தோணவே மேற்புறமு மடிப்புறமுமப்பா
துப்புறவாய் நடுக்குழலில் யிருபக்கமடைத்து,
காணவே வாயுவென்ற காற்றதுவுமொடுங்கி,
கடையாணி சுழலாணி சுள்ளாணிமுடுக்கி
மாணவே பின்பக்கம் சட்டிகுழல் வைத்து
மதிப்புடனே கொப்பரைபோல் உருவைசெய்யே,

செய்யவே கொப்பரையில் அக்கினியும் நிற்க
சேரவே வப்பு வென்ற கொப்மரையின் பக்கம்,
உய்யவே சகலமதுவும் ஆவியோடொக்க
உற்பனமாய் ஆவியது மேல்நோக்கிப்பாய,
எய்யவே கனையாலே நெருப்பதனைமாட்ட
எழிலான உள்ளாவி மேலாவி கொண்டு,
பையவே சலமிருக் குமிடந்தனிலே பரவி
பறக்குமே முன்குழலில் பரவிமிகப்போமே.

போகவே கைசுழலால் மறைதிருவல் அப்பா
பொங்கமுடன் நீராவி தன்னில் மிகச்சார்ந்து,
பாகமுடன் அக்கினியின் காற்றதுவும் ஒடுங்கி
பறந்துமே பெருங்குழாய் தன்னில் மிகச்சார்ந்து,
சாகமுடன் சூத்திரங்கள்கண்டு மிகத்திரும்பக்
கர்ச்சனையாம் ஆவியுடன்பறந்து மிகவோடும்,
தாகமெனும் பாணியினல் ஆவிமுதலெல்லாம்
தட்டொடுங்கிக் குழல் தனிலேதரித்து மிகப் போமே.

போமேதான் ஐம்பூதம் இதிலொடுக்கம் பாரு.
போக்கான வாயுதனில் தேயுமிகச் சார்த்து
வேமே தான்தேயுவிலே அப்புமிகக் கலந்து
வேகமுடன் ஆவிதனை விளைவிக்கும் பாரு,
தாமேதான் பிரிதிவியில் ஆகாசம் ஒடுங்கி,
தாரணியில் உள்ளடக்கப் பெட்டிமிக ஆச்சு
நாமேதான் சொன்னபடி பஞ்சகர்த்தாரோடு
நாட்டினேன் தேவரதம் நாட்டினேனே !

நாட்டினேன் நாதாக்கள் கண்டதில்லை
நலமுடனே நூலாதி நூல்களெல்லாம்
வாட்டமுடன் கண்டறிந்து உளவுபார்த்து
வளமுடனே செய்து வைத்தேன் சீனம் தன்னில்
தாட்டிகமாய்ச் சீனபதி மூன்றுகாதம்
தாரணியில் சுற்றிவந்து வினோதஞ் செய்தேன்,
ஓட்டமுன் இமயகிரியோரம் சென்றேன்
ஓகோகோ நாதாக்கள் ரிஷிகண்டேனே.

கண்டேனே கோடிமுனி சித்தரப்பா
கைலங்கிரி வாசரைப்போல் கோடாகோடி,
தெண்டமுடன் அடியேனும் காலாங்கி தம்மைத்
தெளிமையுடன் நான்நினைத்துச் சித்தர்தம்மை,

கொண்டபடி செனங்களெல்லாம் ஏற்றிக்கொண்டு
கோவையுடன் ஆயிரமாம் ரதங்கள்மாட்டி,
அண்டர்முனி ராட்சதர்கள் கிடுகிடுக்க
அவனியெல்லாஞ் சுற்றிவந்தேன் அன்பாய் தானே!

## போகர் நீராவிக் கப்பல் செய்தது

செய்யவே மராமரக் கப்பல்தானும்
சிறப்பாக ஆயிரம் கூட்டத்தோடும்
பையவே சூத்திரமா மரக்கலம்தான்
பாருலகில் சீனபதியார்கள் மெச்ச,
மெய்யவே நீளமது கெஜம் எண்ணூறு
எதிரான அகலமது கெஜம் ஐந்நூறு
பெய்யவே சதுரமது தீர்மானித்துப்
பிசகின்றி முடிந்தவகை கூறுவேனே.

கூறுவேன் சட்டமது பலகைகொண்டு
குறிப்புடனே வில்லாணிதான் புனைந்து,
வாருடனே கயர்நீளமளவெடுத்து
வகுப்புடனே நெம்புவை தன்னிற் சேர்த்து,
காறுடைய அடிப்பீடந்தான் புனைந்து
கருவான ஆணிமிகத்தான் முடுக்கி,
பேறுடைய விட்ட மதுகுறுக் கணிந்து
பேரானகாலுடனே மாட்டிடாயே.

மாட்டவே தொட்டியென்ற பீடமாச்சு
மகத்தான ஏழுவரை உண்டுபண்ணு,
நீட்டமுடன் காலாறு மண்டபத்தில்
நிலையான தூணதுபோல செய்துமேதான்
வாட்டமுடன் உயரமது கெஜநூறும்
வாகுடனே ஏழுவரை யுள்ளடக்கி
பூட்டகமாய் முதல்வரையில் பலகை போட்டுப்
புகழாக மேல்முடி வழிசெய்தேனே.

வழியான அறுபத்து நான்குவீடு
வரையான எழுவரையின் கீழேயப்பா
நெறியான சன்னல்களும் அனந்தமாகி
நேரான தெற்குமுகம் வடக்குமாக்கி
விழியான மேற்குமுகம் கிழக்குமாக்கி
வீறான கோட்டையது உள்ளடக்கி
முழியான தெத்துடனே வாசலாக்கி
முனையான இருபுறமும் சுக்கான்பாரே.

பார்க்கவே முதல்வரைக்கு மேலேயப்பா
பாங்கான விரண்டாங்கால் மச்சியப்பா
ஏற்கவே பலகைபோல் சுவருண்டாக்கி
என்மகனே நாற்புறமும் கதவுண்டாக்கி
தீர்க்கமுடன் சட்டமது மேலே போட்டுத்
திறமான மாணி மிகப் பூட்டிமாட்டி,
மார்க்கமுடன் சிறுபரணி மேலேகட்டி
மகத்தான சுக்கானின் ஆணி போடே

போடவே கீழாணி மேலாணி கொண்டு
பொங்கமுடன் சூட்சம மாட்டிப்போடு,
நீடவே மூன்றாங்கால் மச்சுவீடு
நேர்பான பலகைகொண்டு மூடிப்போடு,
கூடவே சுற்றெங்கும் சன்னல் வைத்துக்
கொப்பனவே அறுபத்து வாசல்தன்னில்,
மேடவே வாசலுக்குப் பலகை போட்டு
மேன்மையுடன் சட்டமதாய்ப் பதிந்துச் சாத்தே.

சாத்தையிலே சூட்சமுடன் ஆணிபோட்டு
சார்பாக மூலியிடம் சுக்கான்மாட்டி,
காத்தடங்கும் பக்கமதில் சூட்சப்போட்டு
பாங்குடனே சுற்றெங்கும் கதவுமாட்டி,
நேர்த்தியதாய் மேல்வட்ட கீழ்வட்டங்கொண்டு
நெடிதான உள்வட்டம் தன்னில்சுக்கான்,
மாத்தியே தான்முடுக்கி வடத்தைமாட்டி
வகையுடனே நாலாங்கால் மச்சிதாமே.

தாமேநான் மச்சியது அறுபத்துநான்கு
தாழ்வான வாசலது நூற்றிருபத்தெட்டு,
போமே தான் இருபக்கம் கதவுமாகும்
போக்கான வாலது உள்கதவு கொண்டு.
வேமேதான் சங்கிலியும் அள்ளுமாட்டி
மேலான சன்னல்களுக் குறுதியாணி,
நாமேதா(ன்) நினைத்தவண்ணம் முடித்தேனப்பா
நலமாகச் சுற்றெங்கும் கிராதிதானே.

கிராதியாம் இருமூலை சுக்கான் போட்டுக்
கீர்த்தியுடன் அஞ்சாங்கால் மச்சுமாக்கி,
தராதிபரும் தான் இருக்க மச்சுமாகி
தாழ்வான அடிவாரம் சுரங்கம்போலாம்,

நிராதியுடன் அறுபத்துநான்கு மாளி
நிர்மித்துப் பலகையுடன் சட்டமாட்டி,
பராதியுடன் சன்னல்களு(ம்) மிகவுண்டாக்கி
பக்கமெல்லாம் சூத்திரமாம் பலகைதானே,

பலகையாம் அறுபத்துநாலு வாசல்
பாங்குடனே சீர்திருந்தி உள்ளே சட்டம்,
நிலைமையுடன் யிருபக்கம் வாசல்விட்டு
நிவர்த்தியுடன் சுற்றிலுமே கதவமைத்து,
பலகையுடன் சட்டமதால் பலகைமாட்டி
மார்க்கமுடன் காற்றதுவும் வொடுங்கிநிற்க,
சலகையுடன் கிராதிகளில் கண்ணுடியாலே
சாங்கமுடன் வாசல்வழி நூற்றிருபத்தெட்டே,

எட்டான மேல்வாசல் சன்னலாகும்
எழிலான வைந்தாங்கால் மச்சியாக்கி,
திட்டான மாளிகையாம் அறுபத்துநாலு
திடமான கோட்டையது நூற்றிருபத்தெட்டு,
மட்டான வழிகளிலே சூத்திரங்கள்மாட்டி
மகத்தான கிராதிகளில் பிரதிமைகள் அமைத்து,
வட்டானவாசலும் நெடுவாசல் வட்டம்
வகுப்புடனே இரும்புகம்பி யிருந்துநான்கே.

பக்கமுடன் மேலறை ஊடுருகமாட்டிப்
படிவுடனே வாராங்கால் மச்சி வீடப்பா
நிற்கஇடமிருப்பதற்கு இருபுறமும் ஆளி
நிர்மித்துச் சுக்கானை வடங்கொண்டு திருப்ப,
சுக்கானுடன் இரு பக்கம் சங்கிலியால்மாட்டி
சுழலான நடுமையம் இருபக்கந்தானும்,
தக்கபடிவுள்ளுருளை இரும்பு குழல்தானும்
சமைந்திட்டேன் தலைபுறத்தில் அக்கினியுமாச்சே.

ஆச்சப்பா பீடப்பக்கம் தண்ணீயது நிற்க
அப்பனே குழலொன்று சமைத்திட்டேன் யானும்,
மூச்சப்பா போகாமல் குழைகளுக்கும் புக்கு
முனையான தண்ணீரும் கொதிக்குமிக வேளை,
வாச்சமுடன் தாள்திறந்து தண்ணீரும் ஆவி
மற்றுமுள்ள குழைகளுக்கு தானருந்தியோட,
காச்சநீராவிகுழல் தனிலே புகுந்து
கருவான சக்கரத்தை திருப்புமிகலாச்சே!

திருப்புகையில் சக்கரமும் சுக்கானும் கொண்டு
திறமுடனே யேழாங்கால் மச்சியது நின்று,
பொறுப்புடனே வாணிதனைத் தட்டிப்போட்டேன்
பொங்கமுடன் மரக்கலமு நிற்கலாச்சு,
தருக்கலுடன் கள்ளாணி கொண்டுமாட்டி
தகைமைபெற மரக்கலத்தை நிறுத்தியானும்,
குருக்கலுடன் புகையடங்கி நங்கூரத்தைக்
குறுக்கிடவே கடைசி முனைமாட்டினேனே

மாட்டினேன் சக்கரமும் எட்டதாகும்
மார்க்கமுடன் உள்ளாணி அச்சியாணி
நாட்டியே துளைகொண்டு தாள்முடுக்கி
நலமாகச் சக்கரம் சட்டிபூட்டி,
வாட்டமுடன் மரக்கலம் மத்திவாசல்
வழியுடனே தாள் அணிந்து வாணிமாட்டி,
தேட்டமுடன் மேல்வரை கீழ்வரை மட்டும்
தேரினது சக்கரம்போல் சட்டமாமே.

சக்கரமாம் உள்வரிசை நெடுவரிசை யாவும்
சட்டமுடன் பிகுவெடுத்து ஆணி தன்னால்,
பக்கமெலாம் குழாய்களுக்குக் கம்பிமாட்டி
பாங்குபெற உள்ளாவி ஊடுதாக்க,
நெக்க இடமில்லாமல் புகைகள் நிற்க,
நேராகக் குழல்புனலில் முடுக்கிவிட்டு,
தக்கபடி நீராவி நிதானம் பார்த்துத்
தந்திரமாய் சூத்திரம் உண் டாக்கினேனே.

ஆக்கமுடன் கப்பலொன்று நேமித்தேதான்
அதன்மேலே வெகுசனங்கள் யேத்திவிட்டேன்,
மார்க்கமுடன் சித்தர்முனிரிஷிகள் தம்மை
பாங்குபெற மேலவரையேற்றி விட்டேன்,
நோக்கமுடன் மேலவரையில் நான் இருந்தேன்
நோட்டமுடன் சுக்கானை முடுக்கிவிட்டு,
சோக்கமுடன் கடலேழும் சுற்றி வந்து
சூட்சமுடன் கப்பலதை நிறுத்தினேனே!

## 'காத்தாடி வித்தை' செய்தது

தானுனபிரமகோடி வித்தை செய்தேன்
தாக்கான காத்தாடி வித்தைவித்தை,
மானுனவித்தையிலும் தீதவித்தை,
மானுக்கள் புகலுகிறேன் மகிமைகேளு.

வேணுனபட்டமது கெஜமோபத்து
வேகமுடன் நீளமது கெஜமோபத்து,
பாணுனவட்டமது நடுவட்டந்தான்
பாங்குடனேவுள்வட்ட முழந்தான்ரெண்டே.

இரண்டானபக்கவட்ட மூன்றேயாகும்
எழிலான நெடுவட்டம் நாலேயாகும்,
முரண்டான வெளிவட்டம் சக்கரம்போல்
மூலத்தின் உள்வட்டம் கமலமாகும்,
திரண்டான சுற்றுரேம் கம்பியப்பா
திரளானகம்பிகளில் காதுரண்டாம்,
உருண்டான நடுக்கம்பில் சூட்சாதாரம்
உத்தமனேபுறவட்டம் வளையமாமே.

வளைவுடனே ஒவ்வொன்றில் கொலுசுமாகும்
வரிகளிலே காந்தமது சத்தேயாகும்,
கலையுடனே நானென்ற பட்டேயாகும்
கம்பிகளில் தையல்களை ஒட்டவேண்டும்.
துலையான கொலுசுகளில் குண்டேயாகும்
தோராத கயறுகளில் சூட்சமாட்டி,
முளையுடனே பூமிதனில் கயிறை மாட்டி
மூர்க்கமுடன் பறக்குகையில் கயிறைத்தட்டே.

தட்டையிலே காத்தாடிதான் பறந்து
சந்திரனுர்மண்டலத்தின் அளவு மட்டும்
நெட்டையிலே தான்பறந்து நின்றுவாடும்
நிலையானசூட்சாதி சூட்சத்தாலே,
முட்டையிலே உள்ளிருந்த கருவைப்போலும்
ஒருங்குடனே நின்றுடும் நெடுநேரந்தான்,
சட்டையிலே நார்ப்பட்டுக் காற்றைக் கொண்டு
சடுதியிலே தானெடுக்கும் பான்மைபாரே.

பான்மையாம் வாயுவது மேலாதாரம்
பற்றுகையில் காந்தாடி மேலே நோக்கும்.
வான்மையுடன் நடுக்கம்பி வட்டந்தன்னில்
நயமுடனே சூட்சாதி சூட்சந்தன்னை
மேன்மையுடன் கயிறுமாட்டி சுருக்கும்போது
மெல்லெனவே காத்தாடி இறங்கலாகும்,
தான்மையுடன் சுக்கானின் சூட்சமப்பா
தாரணியில் ஆர் அறிவார் விசுவர்தானே.

விசுவனும் தேவகம்மாளச் சித்தன்
வேணபடி செய்துமல்லோ சூட்சங் காண்பான்.
பசுவுடனே கண்சேர்ந்த கதையைப்போல
கருத்தறியார் முழுமூடர் காண்பரோதான்,
முசுருடைய இரும்பதனில் காந்தம்சேர்ந்து
முடித்தார்கள் காத்தாடி விஞேதவித்தை,
நசுறுண்டாய் சூட்சாதி சூட்சமார்க்கம்
நாமுரைந்தபடி யாருங் கண்டிடாரே.

நடத்தினேன் சீனபதி சனங்களெல்லாம்
நலமுடனே காத்தாடி தன்னில்கொண்டு,
திடத்துடனே சீனபதி மூன்றுகாதம்
திறமையுடன் சுற்றிவந்தேன் சித்தர்மெச்ச.
வடத்திடமாய்ச் சூத்திரக் கயிறுசேர்த்து
வாருடனே சீனபதி இறக்கிவிட்டேன்,
நடத்துடனே சீனபதிச் சனங்களெல்லாம்
சந்தோஷித்து என்பேரில் அன்புற்ருரே !

# சாகாக்கலே 9

மனிதனுக்கு ஏற்படும் துன்பங்களில் எல்லேயற்றக் கொடிய துன்பம் மரணமே.□

''சாதலின் இன்ஞது இல்லே'' என்கிருர் திருவள்ளுவர்.

''மரணம் வரும் என்றெண்ணில் நெஞ்சம் துடித்து யாவேன'' என்கிருர் தாயுமானவர்.

எந்த சமயமும் மரணத்தை வெல்ல வழிவகுத்ததில்லே. மனிதன் இறந்த பின் பேரின்பத்தை அடைவான் என்றுதான் சொல்லுகின்றன. மரணம் என்பது இயற்கை. பிறந்தால் இறப்பு நிச்சயம் உண்டு.

மரணம் ஏற்படும்போது ஏற்படும் துன்பத்தை மரண வேதனே என்றே கூறுவர்.

இறவாமல் இருக்க வழி உண்டா? உண்டு. பிறவாமல் இருப்பதுதான்.

---

□பிரதிபா பிரசுரத்தின் ''மரணத்திற்குப் பின்'' பார்க்கவும்.

நாம் எங்கு சென்றாலும் நம் நிழல் நம்மைத் தொடர்கிறது அந்த நிழலை நிறுத்த முடியுமா? முடியும். எப்படி?

நாம் ஒரு மர நிழலையடைந்தால் நம் நிழல் இருக்காது. அதுபோல இறைவன் திருவடி நிழலையடைந்தால் பிறவி என்ற நிழல் நின்றுவிடும். மறுபடியும் பிறப்பு வராது.

இதனால் பிறவாமை வேண்டும் என்கிறார் காரைக்காலம்மையார். பிறவாதிருக்க வரம் தர வேண்டும் என்கிறார் பட்டினத்தார். 'பிறவி வேண்டேன் அரங்கமா நகருள்ளானே' என்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார். ''இனி பிறவாது நீ அருள்வாயே'' என்கிறார் அருணகிரியார்.

பிறந்த பின் இறவாதிருக்க வழி சொல்கிறார்கள் சித்தர்கள்.

ஒரு சிறு புள்ளியாக கருவில் தோன்றிய ஜீவன் பத்து மாதம் வளர்ந்து குழந்தையாக வெளிவந்து வளர்ந்து வாலிபனாகி பின் நரை திரை ஏற்பட்டு முடிவாக மரணமடைகிறது.

இப்படி வளர்ந்த உடம்பு தேய்ந்து அழியக் காரணமென்ன? இதை ஆய்ந்து, அழியாதிருக்க வழி இருக்கிறதென்று கண்டு அவ்வுண்மையை விளக்கியவர்கள் சித்தர்களே.

மனித உடலிலுள்ள அசுத்த அணுக்களை சுத்த அணுக்களாக மாற்றி சரீரம் ஒளிமயமாக மாறி சாகா நிலையை அடைய காய கல்ப சாதனையையும் 'வாசி' பயிற்சியையும் வகுத்து தந்தவர்கள் சித்தர்கள்.

'வாசி யோகம்' என்பது பிராணாயாமமே.

சித்தர்கள் சிரஞ்சீவி. இன்னும் இருந்து வருகிறார்கள். மரணமில்லாப் பெருவாழ்வு வாழ முடியும் என்ற நம்பிக்கை இந்து மதத்தினரிடையே நீண்ட காலமாக இருந்து வருகிறது. இதனை விஞ்ஞான ரீதிப்படி நிரூபிக்க முடியாமல் இருக்கலாம். ஆனால் மெய்ஞ்ஞான சாஸ்திரப்படி இந்த நிலை இருக்கிறதென்பதை மறுப்பதற்கில்லை.

சூத்திரப்பாவை கயிறறுந்து வீழுமுன்
சூட்சுமக் கயிற்றினைப் பாரடா
அதிசூட்சுமக் கயிற்றினைப் பாரடா!

—குணங்குடி மஸ்தான் சாகிப்

சூட்சுமக் கயிறு என்பது இவ்வுடலுக்குள் இருக்கும் உயிரின் ஊசலாட்டம். இந்த ஊசலாட்டத்தையும் அதன் முடிவையும் காண்கிற பாதையிலிருந்து படிப்படியாக மேலேறி ஜோதியைக் காண்பதே சாகாக் கலை.

இந்த சரீரம் அழியும் பல பொருள்களைக் கொண்டது ஆனால் அதனுள் அழியா வஸ்து (ஆத்மா) இருக்கிறது.

அழியாப் பொருள் அழியும் பொருளை மாற்றி திருத்தி தன் வயமாக்கப் பார்க்கிறது. அழியும் பொருள் இதற்கு இணங்காமல் சண்டித்தனம் செய்கிறது.

சாகாக் கலையின் முக்கிய சாதனம் யோகாப்பியாஸமே. யோகாசனங்கள் மொத்தம் 108. அதில் முக்கியமானது 72. தேகாரோக்கியமுள்ள ஒருவரின் இருதயம் நிமிஷத்திற்கு 72 தடவை அடித்துக் கொள்கிறது. ஒரு துடிப்புக்கு ஒரு ஆசனம் என்பது சித்தர்கள் கூறும் வழி.

மூளைக்கு ரத்த ஓட்டம் குறைந்தால் நரை திரை மூப்பு ஏற்படும். ஆகவே இதைத் தவிர்க்க சிரஸாஸனம் முக்கியம். மூளை முன் மூளை, பின் மூளை என்று உள்ளது. கல்பனு சக்திக்கு முன் மூளையும் ஞாபக சக்திக்கு பின் மூளையும் செயல்படுகிறது. மூளையின் யோசனை செய்யும் பகுதி தூக்கத்தில் ஓய்வு பெறும் உறுப்புகளை நடத்தும் பகுதிக்கு ஓய்வே இல்லை. இது ஓய்வு பெற்றுல் மரணம் ஏற்படும். நரம்புகளில் கோளாறு ஏற்பட்டால் மூளை தன் வேலையை ஒழுங்காகச் செய்யாது. மூளையின் உயர்ந்த பகுதி ஓய்வு எடுக்காமல் இருக்கும்போது கனவுகள் ஏற்படுகின்றன.

ஹட யோகம் மூலம் அதிக காலம் வாழலாம். 'ஹ என்றுல் சூரியன். 'ட' என்றுல் சந்திரன். சூரிய நாடி, சந்திர நாடி இவைகளை முறைப்படி இயக்கினுல் மனதை ஒருமுகப் படுத்த முடியும்.

மூக்கு நுனியில் பார்வையை நிறுத்துவது மூலம் மனம் ஒன்றுபடச் செய்யலாம். இதற்கு சாம்பவி முத்திரை என்று பெயர். சிலர் இதையே கேசரி முத்திரை என்கிறுர்கள்.

## ஐம்புலன்களை அடக்கும் உபாயம்

ஆகமம் என்பது தந்திர சாஸ்திரம். அதாவது உண்மையை நேரில் கூறுமல், அதில் குறிப்பிட்டபடி செய்தால் ஞானம் ஏற்படும் என்று சொல்லும் இது பிரும்மத்தை நேரில் காட்டாததால் ''விட்டலக்கணை'' என்பர். வேதாந்தம் பிரும்மமே சத்து. காணும் உலகம் அசத்து. சத்தான பிரும்மத்தைப் பற்றிக் கொண்டால் அசத்தான பிரபஞ்சம் இயல்பாகவே விட்டுவிடும் எனப் போதிக்கும். இதை ''விடாதலக்கணை'' என்பர்.

இந்த இரு நெறியையும் ஒப்புக்கொண்டு தேகத்தில் புதைந்துள்ள அறிவுருவமான ஆத்மாவை தேகப் பிரக்ஞையினின்றும் பிரித்து அகண்ட வஸ்துவுடன் இணைக்கும் நெறிக்கு விட்டு விடாத நிலை என்று பெயர்.

ஹடயோகத்தில் மூச்சுக் கதியை கும்பகம் செய்துவிட்டால் மனத்தின் செயல் நிறுத்தப்பட்டு சமாதியை அடைய முடியும், கேசரி யோகம்படி உள் நாக்கை நாக்கு மூலம் மூடினுல் சுவாசம் நின்று மனம் ஒய்ந்துவிடும் என்று கூறும் சித்தர்கள் பைரவி வித்தை, சாம்பவி வித்தை என்ற இரண்டையும் பகிரங்கமாகக் கூருமல் ஒரு சிலருக்கே சம்பிரதாயக் கிரமமாக வழங்கியுள்ளனர்.

ஜீவன் சப்த ஸ்பரிச ரூப, ரச, கந்தம் என்பதன் மூலம் ஏற்படும் அசைவினுல் ஒவ்வொரு வகை அறிவைப் பெறுகிறது. பொறிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை அறிவைத்தான் ஜீவனுக்குப் புகட்டும். ஜீவன் மூளையைக் கொண்டு செய்தவைகளையும் செய்ய வேண்டியவைகளையும் நிர்வாகம் செய்து கொள்கிறது.

மனிதனின் அறிவே ஆத்ம சூரியன். அறிவு அக்னி மண்டலமான மூலாதாரத்தைப் பற்றியபோது காமம் இடம் பெற்று மனிதனை தகிக்கிறது. அறிவு சந்திர மண்டலத்தில் இடம் பெற்றபோது சாந்த புருஷனுகிருன்.




1. அபாவ யோகம் - சிவ ஸ்வரூபத்தை சூன்யம் என்றும் குணங்கள் அற்றது என்றும் தியானிப்பது,

2. மகா யோகம் - சிவஸ்வரூபத்தை பேரானந்த ஸ்வரூபமாகவும், நிர்மலமானதாகவும் தியானிப்பது, இதை 'அமல யோகம் என்றும் கூறுவர்.

இந்த அமல யோகம் மனதைப் பற்றியது. மனமாகிய நுண்ணுடல் ஆக்கத்திற்கு பருவுடல் ஆக்கமும் வேண்டும். பருவுடல் ஆக்கத்திற்கு ஹட யோகம் பயில வேண்டும்.

இந்த உடலைத்தான் சித்தர்கள் ''ஐந்து கல்லால் ஒரு கோட்டை அக்கோட்டைக்கு ஒன்பது வாசல்'' என்று பாடியிருக்கிறார்கள்.□

## நீண்ட காலம் வாழ வழி

இது பிராணாயாமம் மூலமே சாத்யம்.

சூரிய நாடி (வலது நாசி) சந்திர நாடி (இடது நாசி) இவைகளின் வழியே செல்லும் சுவாசங்களால்தான் ஆயுள் கணக்கிடப்படுகிறது.

ஆரோக்கியமுள்ளவர்களுக்கு சூரிய நாடி வழியே 8 அங்குல சுவாசமும் சந்திர நாடியின் வழியே 12 அங்குல சுவாசமும் நடக்கிறது.

இயற்கையின் நியதி அரை மணிக்கு ஒரு தடவை வலது நாசியின் வழியாகவும் இடது நாசியின் வழியாகவும் சுவாசம் மாறி மாறி வந்துகொண்டேயிருக்கும், [சந்திர நாடி வழியே (இடது நாசி) சுவாசத்தை செல்ல விடாமல் சூரிய நாடி வழியே (வலது நாசி) சுவாசம் செல்லும்படி பழகிக் கொண்டால் 120 ஆண்டுகள் வாழலாம்.

எல்லா இந்திரியங்கள் மூலம் வரும் அறிவு நெற்றிக் கண் இருக்கும் ஆக்ஞா சக்கிர ஸ்தானத்தில் ஒன்று சேருகிறது. இது ஆகாயக் கூறு ஆனபடியால் கண்ணுக்குத் தெரிவதில்லை.

இந்த இடத்திற்கு மின்சாரம் கம்பி வழியாக வருவது போல இந்திரியங்களிடமிருந்து அறிவு வருவதை நாதம் என்கின்றனர். இந்த ஆக்ஞா சக்கிரமே மாகேஸ்வரி பீடம். (Pituatary G|anb என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்கள்) தியானத்திற்கு முதல் தொடக்க நிலை இங்குதான் ஆரம்பமாகிறது.

அறிவை சகஸ்ர தளத்திற்கு செலுத்தினால் அதுவே மாற்றிப் படைக்கும் சக்தியாகும்.

உடலறிவு பிராண வாயு வியாபகத்தினால் அமைந்துள்ளது. உடலறிவு மாற்றிப் படைக்க வேண்டிய அறிவை யாரும் அறியவில்லை. பிராணன் லயம் செய்யும் நிலையை அறிந்தவர்களிடம் சிவம் பிரகாசிக்கும்.

---

□ மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற 5 கற்கள்.
கண் 2, காது 2, மூக்குத் துவாரம் 2, வாய் 1, குறி 1, குதம் 1—ஆக 9 வாயில்கள்,

சிவத்திற்கு உடல் சம்பந்தப்பட்ட அதோ முக சக்தி ஒன்று. உயிர் சம்பந்தப்பட்ட சித் சக்தி ஒன்று.

பசியினுல் சோர்வுற்றுக் கிடப்பவனுக்கு உணவும் நீரும் கொடுத்தால் புத்துயிர் பெறுகிறுன். அது போலவே ஜீவ சக்திகள் அடங்கிக் கிடக்கும் நாத விந்து சக்திகளை மூக்சு சக்தி யினுல் வெளிப்படுத்தி இணைத்தால் பிரகாசமும் இளமையும் ஏற்படும். இதை சாதிக்க தெய்வ அருள் வேண்டும்.

ஈராறு கால் கொண்டு எழுந்த புரவியை
பேராமல் கட்டிப் பெரிதுண்ண வல்லீரேல்
நீராயிரமும் நிலமாயிரத்தாண்டும்
பேராது காயம்; பிரான் நந்தி ஆணையே,

—திருமூலர்

சுவாசத்தை குதிரைக்கு ஒப்பிடுவது மரபு, சாதா குதிரைக்கு 4 கால்கள். சுவாஸமான இக்குதிரைக்கு 12 கால் கள். பிராணுயாமத்தின் சிறப்பே ஆதார யோக நிலைக்கு பலத்த அஸ்திவாரமாகும். 12 மாத்திரையாக சுவாசம் வெளி யேறுகிறது. (விவரம் பிரதிபா 'குண்டலினி சக்தி'யில் காண வும்) 12 மாத்திரை வெளியேறிய பின் 8 மாத்திரை சுவாஸமே உள்புகுகிறது. இதனுல் 4 மாத்திரை நஷ்டமாகிறது.

இப்படி வாசி நஷ்டப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

நீரிலே ஒரு பண்டம் நீண்ட காலம் இருந்தால் அது அழுகி விடும். மண்ணில் ஒரு பண்டத்தை நீண்ட நாள் புதைத்து வைத்தால் அது மட்கிப் போகும். நெருப்பையும் சுாற்றையும் ஆகாய வெளியையும் யோக சித்தி பெற்றவன் வசம் செய்து கொண்டுவிடலாம். பிராணனை வழிபடுத்திவிடுவதனுல் ஏனைய ஒன்பது வாயுக்களையும் அவன் தன் வசமாக்கிட முடிகிறது. ஆதார யோகி நீரில் இருந்தாலும் மண்ணில் இருந்தாலும் அவன் உடல் கெடாது. இதனை சில ஹட யோகிகள் செய்து காட்டுகிறுர்கள்.

ஆரம்பத்தில் அந்தகரணங்களை அடக்க வேண்டும். பின் சக்தி கலைகள் வசப்பட வேண்டும். பின் குண்டலினியிலுள்ள பிராணன் மேல் எழுந்து அருட் சக்தியுடன் அளாவ வேண்டும். முடிவாக சித்தம் கலக்கம் சிறிதும் இன்றி நிலைக்க வேண்டும். சித்தம், மனம், அகங்காரம், புத்தி இவற்றை ஆன்ம லய வழி யில் திருப்புவது எளிதன்று. 'கந்துக மதக் கரியை வசமாய் நடத்தலாம்' என்று தொடங்கும் தாயுமாணுர் பாடல் இக் கருத்தை விளக்கும்.

சித்தம் கொண்டு வந்த விஷயத்தைக் கண்டு மனம் ஐயுறுகிறது. பின்பு அவ்விஷயம் அகங்காரத்தை அடைகிறது, இங்கு நடைபெறும் கிளர்ச்சியால் சித்தம் விரிவும் கலக்கமும் கொள்ளும். பின் விஷயம் புத்தியிடம் போகிறது.

புத்தி முக்குண வயப்பட்டிருப்பதாதலால் தான் வயப்பட்டுள்ள குணத்துக்கு ஏற்றபடி விஷயத்தை மாற்றி புருஷ தத்துவ ரூபமான ஆத்மாவிடம் அந்த விஷயமாகிய சுக துக்க மோக அனுபவங்களை அடையச் செய்கிறது. இதனையே ஆத்மானுபவம் என்பர். சித்தம் முதலிய நான்கும் தீநெறியில் சேராமல் அறநெறியில் செல்ல வேண்டும்.

பின் சக்தியருளைப் பெற எட்டு விதமாகச் சொல்லப்படுகிற 16 கலைகளையும் வசம் செய்துகொள்ள வேண்டும்.

இந்த சக்திக் கலைகள் 16ம் பிரும்மரந்திரத்தின் மேல் விளங்கும் கலைகள்.

(இவை அ, உ, ம, விந்து, அர்த்த சந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபினி, வியோம ரூபை, ஆனந்தை, அநாதை, அநாசிருதை, சமனே, உன்மனே.

யோகி தன் யோக அப்பியாசத்தினல் தன் தேகம், உள்ளம்' உயிர் (அறிவு) இம்மூன்றினையும் வளப்படுத்திக் கொள்ள வேண்டும். யோக முறை இதற்கேற்ப அமைந்துள்ளது.

ஆதார யோகி காலத்தைப் பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. உரம் இடுவதற்கேற்ப நிலவளம் ஏறுகிறது. இம் மாதிரியே சக்தியின் திருவருள் பலம் ஏற்பட்ட பின் ஆதார யோகிக்கு காலபலம் அதிகரிக்கிறது, காலம் ஆதார யோகியைக் கட்டுப்படுத்தாமல் விலகி நிற்கிறது. இதனல் காலக் கழிவினல் ஆதார யோகி பாதிக்கப்பட மாட்டான்.

சாதகம் ஆன அத்தன்மையை நோக்கியே
மாதவம் ஆன வழிபாடும் செய்திடும்
போது அகம் ஆகப் புகல் உறப்பாய்ச்சினல்
வேதகமாக விளைந்து கிடக்குமே,

—திருமூலர்

உடம்பினுள் உயிர் இருந்து தொழிலாற்ற உதவுவதுபோல உயிருக்குள் உயிரைத் தனது உடலாகக் கொண்டு சக்தி உள்ளே தங்கி இருந்து உதவி செய்கிருள். இவளே திரோதா சக்தியாகவும் அருள் சக்தியாகவும் விளங்குகிருள். வண்டி ஓட்டுபவன் வண்டிக்குள் வேருக இருந்தும் அதனை நல்ல பாதையில் நடத்திச் செல்வது போல சக்தியும் உதவி செய்கிருள்.

## அமுத பானம்

அமுதம் உண்டவர்களுக்கு மரணமில்லை. ஆதார யோகி சகஸ்ராரத்தினின்றும் வற்றுத ஊற்று போன்று வழியும் அமுதத்தை திருவருட் பேற்றினல் எப்போதும் அருந்துவான். இந்த யோகியின் ஞானப் பசி இதனல் தீர்க்கப்படுகிறது

## சிரஞ்சீவத்துவம் பெற்ற மார்க்கண்டேயர்

காலத்தை வெல்லும் உபாயத்தையும் காலன் வசப்படாமல் இருக்கவும் சித்த தர்மம் முயல்கிறது. காலனை வெல்லும் உபாயம் கண்ட மார்க்கண்டேயர் வரலாற்றுக்கான விளக்கம்:

மூலத்துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கி
காலுற்றுக் காலனை காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே.

மூலாதாரத்து மூண்டெழுகின்ற சோதியாகிய தலைவனை பிரம்ம ரந்திரமாகிய சகஸ்ரதளத்தில் மேலாக 12 விரற்கடையில் பொருத்தி ஒளியாகக் கண்டு அங்கு மேலுற்றுப் பொருந்தியவர் சுழிமுனை நாடி விளங்குவதால் காலனை வென்று விளங்கும் வழியை அறிந்தவராவர். இதை விளக்க பூமியில் திருக்கடவூர் ஸ்தலம் இருக்கிறது.

அமிர்தகடேஸ்வரர் - ஒளி விளங்கும் சிரஸு.

அபிராமி - சரஸ்வதிக்கும் பெயர், பார்வதிக்கும் பெயர். சரஸ்வதி என்றபோது ஸூக்ஷ்ம வாக்குகளையும் பார்வதி என்றபோது கண்கவர் ஒளியையும் குறிக்கும். கடவூர் கடைசியாக உள்ள துவாத சாந்த வெளி.

## மரணமின்றி மறைந்த வள்ளலார்

மரணமில்லா வாழ்வு தான் பெற்றுவிட்டேன் என்ற வள்ளலார் மரணமடையவில்லை. மறைந்தே போய்விட்டார்.

1874ல் மேட்டுக்குப்பத்தில் (கருங்குழியைச் சேர்ந்த ஒரு குக்கிராமம்) அவர் ஒரு அறைக்குள் சென்று வெளியே தாளிடச் செய்தார். (இந்த அறை இன்னும் அப்படியே இருக்கிறது) இந்த அறையை கொஞ்ச காலத்திற்கு திறக்கக் கூடாது என்று அவர் சிஷ்யர்களுக்குக் கட்டளையிட்டார். அன்றிலிருந்து அவர் காணப்படவில்லை. அவர் இறைவனுடன் ஐக்கியமாகிவிட்டார்

என்று நம்பப் படுகிறது. காலம் வந்ததும் அவர் திரும்பவும் வருவார் என்று நம்பப்படுகிறது.

(தென்னுற்காடு மாவட்ட மான்யூவெல்-இதை எழுதியவர் கலெக்டர் ஜே. எச். கார்டின்ஸ், ஐ.ஸி.எஸ்.)

''சாகாத வித்தைக்கு இலக்கணம் இலக்கியம் தானுய் இருந்த பரமே'' என்கிறுர் ராமலிங்க ஸ்வாமிகள். மனிதன் சாவாதிருக்க ஒரே வழி சுத்த சன்மார்க்கம்தான் என்பதை,

''சிறந்திடு சன்மார்க்கம் ஒன்றே பிணி மூப்பு மரணம்
சேராமல் தவிர்த்திடுங் காண் தெரிந்து வம்மின் இங்கே''
என்கிறுர்.

சாவாத வாழ்வைப் பெற அவர் உபதேசிக்கும் மந்திரம்:
'பசித்திரு, தனித்திரு, விழித்திரு,''

இதையே தாயுமானவரும் கடைப்பிடித்தார்.

கனியேனும் வறிய செங்காயேனும் உதிர்சருகு
கந்த மூலங்களேனும் கனல்வாதை வந்தெய்தின்
அள்ளிப் புசித்து நான் கண்மூடி மெளனியாகித்
தனியே இருப்பதற்கு எண்ணினேன்
எண்ணமிது சாமிநீ அறியாததோ.

ராமலிங்கர் தாம் இறவா வரம் பெற்றதாக அவரே பாடியுள்ளார்.

கற்ப கோடியினும்
வயத்தோடு சாகாவரமும் என் தனக்கே
வழங்கிடப் பெற்ற என் மரண
பயத்தை விட்டொழித்தேன் எனக்கிது போதும்
பண்ணிய தவம் பலித்ததுவே.
கட்டமும் கழன்றேன் கவலே விட்டொழிந்தேன்
கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமும் கிழித்தேன் துக்கமும் துறந்தேன்
சாவையும் நோவையும் தவிர்த்தேன்
சிட்டமும் அடைந்தேன் சிற்சபை உடையான்
செல்வ மெய்ப்பிள்ளை என்றொரு பேர்ப்
பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்
பண்ணிய தவம் பலித்ததுவே,

## சிந்தையை அடக்கி சும்மா இருத்தலே பெரும் சித்து

சித்து விளையாடுவது எளிது. ஆனால் ''சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறன் அரிது'' என்கிறார் தாயுமானவர்.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் ''ஆச்சரிய சித்துக்கள் காட்டுவதாகச் சொல்லும் மனிதர் இருக்கும் இடம் போக வேண்டாம்'' என்று எச்சரிக்கிறார்.

### காயகல்பம்

திரை, மூப்பு, இறப்பு இவைகளை வெல்ல சித்தர்கள் வழி கண்டிருக்கிறார்கள். இதற்கு அவர்கள் தயாரித்தது ''காய கல்பம்''. கல்பத்திற்கு அடிப்படை ''முப்பு''. மூன்று உப்புகள் சேர்ந்தது முப்பு. 1. பூநீர்—(வெடியுப்புக்கு மூலம்) இது கைப்பு கசிவு உள்ளது. அதைப் போக்கி சுத்த உப்பாக்க வேண்டும். பூநீர் மலையடிவாரங்களிலுள்ள களர் நிலங்களில் கிடைக்கக் கூடியது. இது வெண்மையாகவும் மிருதுவாகவும் பசைபோல் ஒட்டும்படியாகவும் இருக்கும். இதனை பனியும் வெப்பமும் நிறைந்த மாசி, பங்குனி மாதங்களில் இரவில் எடுக்க வேண்டும். 2. கல்லுப்பு. இந்த பூநீரை சுத்தமாக்கக் கல்லுப்பு அவசியம், இது கடலிலிருந்து எடுக்கக் கூடியது. (கடல் நுரைக் கல்) முத்துச் சிப்பிகள் கிடைக்கும் இடங்களில் சென்று பார்த்து அனுபவ வாயிலாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்,

பூமிக்கு மூன்று அடிக்குக் கீழ் கிடைக்கும் சுண்ணாம்புக் கல்லை எடுத்து சுண்ணமாக்க வேண்டும். அதனை பனிநீர் 4 படிக்கு அண்டக்கல் சுண்ணம் 1 படி சேர்த்து தெளிவெடுத்து பத்திரப்படுத்த வேண்டும்.

3. அமுரி உப்பு-உடல் சின்றின்பத்தில் ஈடுபடாமல் நெல்லி கெந்தியை சுத்தி செய்து சூரணமாக்கி காலை, மாலை அரை தோலா எடை அளவு சாப்பிட வேண்டும், அக்காலம் கருங்குறுவை அரிசி சாதமும் பசுவின் பாலும் ஆகாரமாக ஒரு நாளைக்கு இரு வேளை உண்ண வேண்டும்.

அதிக நடை, வெப்பம், காற்று, பனி, மழை இவை கூடாது. மனது சஞ்சலமற்று இருக்க வேண்டும். இந்த முறையை ஆரம்பித்து ஒரு வாரம் பலஹீனமாகி பின் சமப்படும்.

நாற்பது நாட்கள் கழித்து 41ம் நாள் காலையில் எழுந்ததும் வெளிப்படும் சிறுநீரை பத்திரப்படுத்த வேண்டும். இப்படி சில நாள் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

சுத்தி செய்த பூநீரையும், சுத்தி செய்த கல்லுப்பையும் சம எடையாகச் சேர்த்து சுண்ணமாக்கி அமுரி நான்கிற்கு ஒன்று விதம் சேர்த்து முதல் கொதிகாண எடுத்து மூன்று நாள் பூமிக்கடியில் புதைத்து வைக்கவும். இவ்விதம் பத்து முறை செய்தால் அமுரி (சிறுநீர்) சுத்தமாகிவிடும்,

பின் சுத்தி பூநீர், சுத்தி கல்லுப்பு, சுத்தி அமுரி உப்பு இவை களைச் சம எடை கொண்டு அண்ட நீரால் அரைத்து வில்லை செய்து காய வைத்து பத்து எருவில் புடமிட்டு சுன்னமாக்கி பத்திரப்படுத்தவும், இதுவே 'முப்பு' சுன்னம் எனப்படும்.

இந்த முப்புவின் அடிப்படையில்தான் கொடிய நோய் களுக்கு நவலோகம், நவபாஷாணம் முதலியவைகளால் மருந்துகளுப் மரணமில்லா பெருவாழ்விற்கு கல்பங்களும் உண்ணும் அளவு, காலம், பத்தியம் முதலியவைகளை சித்தர்கள் வகுத்துள்ளனர்.

# பதினெண் சித்தர்கள் 10

இந்த நாட்டில் எவ்வளவோ சித்தர்கள் இருந்திருக்கிறார் கள். இவர்களில் முக்கியமானவர்கள் பதினெட்டுப் பெயர்,

1. அகஸ்தியர்
2, போகர்
3. கைலாசநாதர்
4. கோரக்கர்
5. திருமூலர்
6. சட்டைமுனி
7, கொங்கணர்
8, கூன்கண்ணர்
9. இடைக்காடர்
10. நந்தீஸ்வரர்
11. புண்ணுக்கீசர்
12. ரோமரிஷி
13. மத்ஸ்யமுனி
14. கூர்மமுனி
15. கமலமுனி
16. வாசமுனி
17. பிரும்மமுனி
18 சுந்தரானந்தர்

இவர்களைத் தவிர அஷ்டமா சித்தி பெற்ற கருவூரார், புலஸ்தியர், புசுண்டர், ராமதேவர், தன்வந்த்ரி, கபிலர், சதா சிவ பிரும்மேந்திரர், பட்டினத்தார், வள்ளலார் ராமலிங்கர் ஆகியவர்களும் பிரசித்தி பெற்றவர்கள்.

## சித்தர்கள்வாழ் இடங்கள்

**கொல்லி மலை**

நாமக்கல்லிலிருந்து 50 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது இம்மலை. இயற்கை அழகு மிகுந்த இடம். இம்மலை ஒன்றிய பகுதியிலிருந்து 7 மைலில் அறப்பளீஸ்வரர் ஆலயம் உள்ளது. இது வல்வில் ஓரி என்ற மன்னரால் கட்டப்பட்டதென்று சரித்திரம் கூறுகிறது.

இந்த ஆலயத்திற்கு ஒரு மைலில் ஒரு பெரிய நீர்வீழ்ச்சியுள்ளது. இங்கு மிக அரிய மூலிகைகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இம்மலை பல சித்தர்களின் இருப்பிடமாக இருந்து வருவதாகக் கூறப்படுகிறது.

**சித்தர் மலை**

சஞ்சீவி பர்வதமே சித்தர் மலை. வடாற்காடு மாவட்டத்தில் போளூரிலிருந்து செங்கம் செல்லும் பாதையில் தென் மகாதேவ மங்கலம் என்ற ஊருக்கு மேற்கே இம்மலை இருக்கிறது. இதை பர்வத மலை என்றும் கூறுகின்றனர்.

மேல்புறமுள்ள செங்குத்தான குன்றுகளை ஏற இரு பக்கங்களிலும் கடப்பாறைகள் நடப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பிடித்துக் கொண்டுதான் ஏற வேண்டும். சுனை தென்படும். அங்கிருந்தும் சுமார் 500 அடி உயரம் ஏற வேண்டும்.

அங்கு மல்லிகார்ச்சுனர் கோயில் கொண்டிருக்கிறார். அம்பிகை பெயர் பிரும்மலாம்பிகை.

இம்மலையில் அருவ நிலையில் வாழும் சித்தர்கள் நள்ளிரவில் வந்து பூஜை செய்கிறார்கள். பூஜையின் மணிஓசையை மட்டுமே கேட்கலாம்.

கொங்கு நாட்டில் சித்தர்கள் வழிப்பட்ட பல முருகன் கோவில்கள் இருக்கின்றன.

கோவைக்கு அருகில் மருத மலை. பாம்பாட்டிச் சித்தர் வழிப்பட்டது. திருப்பூருக்கருகில் கொங்கண சித்தர் வழிப்பட்ட கொங்கணகிரி யுள்ளது. சிவவாக்கியர் வழிபட்டது சிவமலை. ஈரோட்டுக்கு அருகிலுள்ள சென்னிமலை பிண்ணாக்கு சித்தர் வழிபட்டது.

**சித்தர் காடு**

மூவலூர் என்ற இடமே சித்தர் காடு எனப்படும் ஸ்தலம். ஒரு காலத்தில் சிற்றம்பலனடியார் என்ற மகான் இங்கு 60

சிஷ்யர்களுடன் வாழ்ந்து வந்தார். இவர் தன் சிஷ்யர்களுக்கு யோக மார்க்கத்தைப் போதித்து வந்தார், ஒரு நாள் சோழ அரசன் அவருக்கு பிக்ஷை செய்விக்க முன்வந்தான். தன் சீடர்களின் பக்குவ நிலையை அறிய வேண்டி அவர்களுக்கு நெய்க்குப் பதிலாக இலுப்பை எண்ணெய் பரிமாற உத்தரவிட்டார்.

எல்லோரும் எதுவும் கூறாமல் புசிக்க ஒருவர் மட்டும் கொஞ்சம் முகம் சுளித்தார். அவர் ருசியை விடவில்லை என்பதை அறிந்த மகான் அவரைக் காசிக்குச் சென்று நீராடி வரும்படி அனுப்பினார்.

பின் அரசனைக் கூப்பிட்டு அங்கு 60 சமாதிகள் கட்டும்படி கூறினார். 59 சீடர்களையும் சமாதியில் வைத்து தானும் ஒரு சமாதியில் அமர்ந்தபோது காசிக்குச் சென்ற சிஷ்யர் பக்குவப்பட்டு வந்து சேர்ந்தார். அவர் குருவோடு ஐக்கியமாகி அதே சமாதியில் அடங்கினார். அரசன் இங்கு ஒரு கோயில் கட்டினான்.

கோவில் பிராகாரத்தில் கர்ப்பக்கிரகத்தை சுற்றி 60 நந்தி உருவங்கள் சித்தர்களின் நினைவுச் சின்னமாக இருக்கின்றன.

(இத்தலம் மாயூரம் ஜங்ஷனிலிருந்து மேற்கே சுமார் ஒரு மைல் தூரத்தில் மாயூரம்—கும்பகோணம் பஸ் மார்க்கத்தில் உள்ளது)

இறைவன் பெயர் பிரும்மபுரீஸ்வரர். அம்பிகை திரிபுர சுந்தரி. சம்பந்தர் கைகூப்பிய வண்ணம் காணப்படுகிறார்.

## சித்தர் சமாதி தலங்கள்

சித்தர்கள் பரமேஸ்வரனைப் பூஜித்து சிரஞ்சீவிகளாக யோக சமாதியில் வீற்றிருக்கும் க்ஷேத்திரங்கள் 21.

திருத்தில்லை சிற்சபை நர்த்தன சபேசன்
செய்ய நற்றிருபத்ம பாதமது தன்னையே
மருவியே பூஜித்து மாறுத அன்புடன்
மாபேறு **திருமூலர்** தாமடைந் தானரோ. 1

கங்கைசூழ் கவினெழுகு காசி நற்பதியாம்
காணரிய **நம்நந்தி** வாழிட மதாகுமே
**கொங்கணவர்** வாழ்கின்ற தலமதா ரேதனில்
குலவு நற்றிருப்பதிக் குன்றமது என்னலாம்
சங்கையில் சீர்காழி தன்னகரை நாநாளும்
**சார்நந்தி** தேவர்தம் இடமதா யெண்ணுவர்
பங்கமில் வேளூர் தன்னூரதாகவே
பார்புகழ் **தன்வந்திரி** தானடைந்திட்டனர். 2

அருமை நற்கம்பமுனி ஆரூர தாகுமே
அனவரத எட்டுகுடி அமர்ந்தனர் **வால்மீகி**
தருமமிகு சீரங்கம் **சட்டமுனி** தன்னதாம்
சிறப்புற்ற கருவூரில் **கருவூரார்** தாமுமே
பெருமைமிகு பழனிமலை தன்னிட மதாகவே
பேசரிய **போகமுனி** பிரியாது வந்தனர்
இருமையறு **சுந்தரானந்த** ருந்தாமுமே
என்றென்று மாமதுரை மாறுதுரைத்தனர். 3

குமரகுரு திருப்பரங் குன்றமது தன்னையே
கூரறிய **மச்சமுனிக்** குறிக்கொண்டதாகுமே
சமரசம் தழையுநல் லழகர்மலை தன்னிலே
சாற்றுதற்கரிய வொரு **ராமதேவருந்** தான்
அமரர் விரும்பனந்த சயனமது தன்னிலே
அமர்தவொரு **கும்பமுனி** வாசமது கொண்டனர்
நமவர்வாழ் ஸ்ரீசைல பெருநகர் தன்னையே
நாடறிய **கோரக்கர்** தமதிடமதாமென்பர். 4

கூடறிய கழுக்குன்ற மெனுமத் தலமதே
கொனற்கரிய **குதம்பையர்** தன் தாமைமாகுமே
தேடரிய ராமேச்சுரமது தன்னையே
திண்மைமிகு **பதஞ்சலி** வாசமாகக் கொண்டனர்
நாடறிய நற்றவர்கள் வாழ்கின்ற அருணையே
தம**திடைக்காட**ராம் நண்ணுதற்கிட மதாம்
ஈடறிய **அகப்பையர்** சித்தர் தமிடமது
எழில்மிகு விருத்தகிரி தலமதுமானதாம். 5

அந்தமில் காளத்தி **கௌரிமாணு**குமே
**அரவாட்டி** சீர்க்கடலூர் தலமதவுமாமே
சந்தத மந்தந்தத்தல சிவலிங்கத்தை
சார்ந்து நற்புத்தியோடு அர்ச்சித்து யேத்தியே
யெந்தையினதருள் பெற்றசித்தர்களாகுவர்
இணையில் மூவெழுவர் ($3\times7=21$) தம்பாதமது தன்னையே
சிந்தையிற் சென்னியிற் சேர்பித்து நாளும்
பந்தமதை யோட்டுவோம் சந்ததமும் நாமே.

திருமூலர் — திருவாவடுதுறை
நம்நந்தி—காசி
கொங்கணர் — திருப்பதிகுன்றம்
நந்தி—சீர்காழி
தன்வந்திரி—வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்)
கமலமுனி—ஆரூர்

வால்மீகி—எட்டுக்குடி
சட்டமுனி—ஸ்ரீரங்கம்
கருவூரார்—கரூர்
போகர்—பழநி
சுந்தரானந்தர்—மதுரை
மச்சமுனி—பரங்குன்றம்
வாம தேவர்—அழகர் மலை
கோரக்கர்—ஸ்ரீசைலம்
குதம்பை—திருக்கழுக்குன்றம்
பதஞ்சலி—ராமேஸ்வரம்
இடைக்காடர்—திருவண்ணமலை
அகப்பையர்—விருத்தாசலம்
கௌரிமானுர்—காளத்தி
அரவாட்டி—திருக்கடவூர்

## புகழ் பெற்ற 18

**கணம்-18**

அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்ஞையர், பூதர், பிசாசர், அந்தரர், முனிவர், ஆகாயவாசியர், போக பூமியர் என பாகுபட்டன பதினெண் கணமே.

—பிங்கலம்

**பாஷை-18**

தேசாதி தேசமைப் பத்தாறிற் பாரு
செப்புவார் பாஷை பதினெட்டும் பாரே.

—மூல குரு சுருக்கம்

செப்புமொழி பதினெட்டுடையாள் எனில்
சிந்தனை ஒன்றுடையாள்.

—பாரதியார்

**வாத்தியம்-18**

செப்பினேம் ஜயபேரி ஜெய மத்தளம், ஜெய தாரை, ஜெய பம்பை, ஜெய சங்குநாதம், அப்பினே மருள் பூரி நாத ஓசை கூடலான கின்னரியும் பதினெண் வாத்யம்,

**ராகம்-18**

பாடலாம் பதினெட்டு ராக பாஷை.

—சுப்பிரமணிய ஞானம்

**யாகம் 18**

சோதிட்டோமம், அங்கிட்டோமம், உத்தியம், ஷோடசி, வாஜபேயம், அத்திராத்ரம், சோம யாகம், சாதுர்மாஸ்யம், பவுத்திர வேதம், சௌத்திராமணி, புண்டரீகம், அங்கிசம், ராஜசூயம், அஸ்வமேதம், விஸ்வதித்து, பிரமமேதம், பிரணவ மேதம், பாசுபந்தம் எனப்பாற்படு பதினெண் யாக மென்ப.

—பிங்கலம்

**உப புராணம்-18**

நாரசிங்கம் சனற்குமாசம் நாரதீயம் சிவதன்மம் துர்வாசம் நந்திகேஸ்வரம் அவுணம் காளிகம் வாருணம் சாம்பேசம் பராசரம் பார்க்கவம் காபிலம் மானவம் வாசிட்டலிங்கம் சவுரம், மாரீசம், பிரும்மாண்ட மென்னும் ஈரொன்பானும் புராண மென்ப.

—பிங்கலம்

**புராணங்கள்-18**

மச்சம், கூர்மம், வராகம்,, வாமனம், பதுமம், வைணவம், பாகவதம், பிரமம், சைவம், லிங்கம், பௌடியம், நாரதீயம், காருடம், பிரும்ம வைவர்த்தம், ஸ்காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம் பாற்படு பதினெண் புராண மாகும்.

**தர்ம நூல்கள்-18**

மநுவே, அத்திரி, விண்டு வாசிட்டம், யமம், ஆபஸ்தம்பம், யாக்ஞுவல்கியம், பராசரம், ஆங்கீரஸம், வசனம், காத்யாயனம் சமவர்த்தம், வியாசம், பிரக்ஸ்பதி, சங்கலிதம், சாதான்மம் கௌதமம், தக்கம், ஈரொன்பானும் தரும நூலின் பெயர் எனச் சாற்றுவர்.

—பிங்கலம்

**குற்றம்-18**

பசியும் நீர் வேட்டலும் பயமும் வெகுளியும் உவகையும் வேட்டலும் நினைப்பு உறக்கமும் நரையும் நோய் படுதலும் மரணம் பிறப்பு மதமும், இன்பமும் மதிசயமும் வியர்த்தலும் கேதமுங் கைய றவு மென்றிவை மாய யாக்கைக்கு பதினெண் குற்றமும்.

—பிங்கலம்

தேவாசுரப் போர் 18 ஆண்டுகளும் ராமாயணப் போர் 18 மாதங்களும் பாரதப் போர் 18 நாட்களும் செங்குட்டுவன்-கனகவிசயர் போர் 18 நாழிகையும் நடைபெற்றன.

மெய்யெழுத்து 18, கீழ்க் கணக்கு 18, மேல் கணக்கு 18.

## சித்த மகாபுருஷர்கள்

### ஆதி குரு அகஸ்தியர்

சித்தர்கள் 18 பேர்களுக்கும் அகஸ்தியர் உபதேச குருவாக வும் ஆதி குருவாகவும் கருதப்படுகிருர்.

இவர் பொதிய மலேயில் சிரஞ்சீவியாக இருந்து வருகிருர். மூர்த்தியில் சிறியவரேயாயினும் கீர்த்தியில் பெரியவர். தமிழ் போதித்த முதல் ஆசிரியர். சிவபெருமானேயே குருவாகக் கொண்டவர். நக்ஷத்திர வடிவாக வானில் விளங்குபவர். கடலேயே ஆசமனம் செய்துவிட்டவர்.

பெயர்க் காரணம்: அகம்-சலியாதது என மலேக்குப் மலேயை ஸ்தா: அடங்கி இருக்கச் செய்தவர்.

சரீரத்தைப் பிணி, பசி, மூப்புகளால் தளர்வடையாமல் காய சித்தி முறையைக் கையாண்டு திடமாக்கி பன்னீராண்டு பிராணுயாமத்திஞல் மூச்சுக் காற்றின் நடையைக் கட்டுப் படுத்திஞல் ஆனந்தத்தை யடையலாம் என்பதை போதித்தவர்.

1884ல் அச்சான ஒரு புத்தகத்தில் (காஸ்மிக்-சைகலாஜிகல், ஸ்பிரிச்சுவல் பிலாஸபி அண்ட் ஸயன்ஸ்) ஐம்பது ஆண்டு களுக்கு ஒரு முறை அவர் சிஷ்யர்களுக்குப் பொதிகை மலேயில் தரிசனம் கொடுப்பதாக எழுதப்பட்டுள்ளது.

பல நூல்கள் அகஸ்தியர் எழுதியதாக அச்சாகியிருக் கின்றன. சித்த சாஸ்திரம், வைத்தியம். மந்திர சாஸ்திரம். இவைகளில் அகஸ்தியரது 2000 (சரஸ்வதி மகால் நூலகம் தஞ்சை) அகஸ்தியர் ஞானம் முக்கியமானவை.

அகஸ்தியர் 2000ல் சகல தேவதைகளின் வசிய மந்திரம், பீஜாக்ஷரம் உள்ளது.

அகஸ்தியரின் குரு முருகன். பராசக்தியை பாலே ரூபமாக உபாசித்தவர்.

குறுமுனியின் வைபவம் ரிக் வேத காலத்திலிருந்து இன்று வரை பொதிகையிலுள்ள சித்த பூமியில் மறவாமல் கொண் டாடப்பட்டு வருகிறது.

ஸ்ரீராமனுக்கு ஆதித்ய ஹிருதய மகாமந்திர உபதேசம் செய்தவர் அவர். பரமசிவனது உத்திரவிஞல் இமய மலே யிலிருந்து புறப்பட்டு விந்திய மலேயின் கர்வத்தை அடக்கி வழியில் கமண்டலம் கவிழ காவேரி நதியை உண்டாக்கக் காரணமாக இருந்தார்.

இவரே முதல் தமிழ் சங்கத்தை நிறுவி தமிழுக்கு தந்தை யானார். தமிழ் இலக்கணத்தின் மூல கர்த்தா இவரே.

## வள்ளலார் ராமலிங்கர்

வள்ளலார் ஜோதி ராமலிங்க ஸ்வாமிகளும் ஒரு சித்தரே. இவர் தன் அருட்பாவில் சுமார் 700 இடங்களில் ஒளி வழி பாட்டைப் போற்றுகிறார்.

புற ஒளி வழிபாடு அக வழிபாட்டுக்கு வழி செய்யும் என்பது வள்ளலார் கருத்து.

கண்களிக்கப் புகை சிறிதும் காட்டாதே புருவக்
கலைநடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே

என்கிறார்.

இவர் சித்துக்கள் செய்யக் கூடியவராலுலும் அவைகளை வெறுத்து ஒதுக்குகிறார்.

''தனித்திரு, விழித்திரு. பசித்திரு'' இது இவர் உபதேசம்.

**தனித்திரு:** இறைவன் அருளால் இறைவனை அடையும் ஆத்மா யோக முறையில் அறிவு பெற்று தன்னைச் சூழ்ந்த தத்துவங்கள் அனைத்தையும் தனித் தனியே நடத்தும். இது தந்துவார்த்த நிலை. இதுவே ''தனித்திருத்தல்''.

**விழித்திரு:** யோக மார்க்கத்தில் சிர நடுவில் இருக்கும் ஆத்மாவை எழுப்பி விழித்திருக்கச் செய்வது.

**பசித்திரு:** யோக மார்க்கத்தில் உச்சந் தலைக்குக் கீழே உள் நாக்குக்கு மேலே இருக்கும் அருள் வயப்பட்ட ஆன்மாவை எழும்பி, அதன் மூலம் கிடைக்கும் அமுதத்தை உண்பது. இதை உண்ண வேண்டும் என்ற பசியோடு இரு.

1823 அக்டோபரில் பிறந்தவர். பார்வதிபுரம் என்ற பெயரோடு விளங்கிய வடலூரில் சன்மார்க்க தர்மசாலை, சன்மார்க்க வேத பாடசாலை, சன்மார்க்க சங்கம் முதலியன அமைத்தார்.

இவர் திருஅருட்பா 6 திருமுறைகளாக வகுக்கப் பட்டுள்ளது.

1, 3 திருமுறைகள் திருவொற்றியூர் பற்றிய பாடல்கள் கொண்டன.

2ம் திருமுறை பாதி திருவொற்றியூர் பாடல்களையும் மற்ற பாதி தில்லை பற்றிய பாடல்களையும் கொண்டது.

4ம் திருமுறையும், 6ம் திருமுறையும் சிதம்பரம் பற்றிய பாடல்களைக் கொண்டன.

6ம் திருமுறை மூன்றாகப் பிரிக்கலாம், முன் பகுதி சிதம் பரத்தில் பாடிய பாடல்கள். நடுப் பகுதி வடலூரில் பாடிய பாடல்கள். கடைசிப் பகுதி மேட்டுக்குப்பத்தில் பாடிய பாடல்கள்.

5ம் திருமுறை முருகனைப் பற்றிய பாடலாகும்.

பஞ்ச பூதங்களின் இயல்பறிந்தோர் அப்பூதங்களாலான எல்லா வடிவமும் பெறுதல் இயலும்.

அறிவுதந்த பேர் அறிவு போற்றி வான்
காற்றும் நீடழல் ஆதி ஐந்து நான்
காணக் காட்டிய கருத்த போற்றி வன்
கூற்று தைத்து நீத்தழிவிலா உருக்கொள்ள
வைத்த நின் கொள்கை போற்றியே.
ஊன் செய்த மெய்யும் உயிரும் உணர்வும் ஒளிமயமாக்
கோன் செயவே பெற்றுக் கொண்டேன்.
ஊன உடம்பே ஒளியுடம்பாய் ஓங்கி நிற்க
ஞான அமுதெனக்கு நல்கியதே.

இதிலிருந்து வள்ளலார் தன் ஊன் உடலை மறைத்துக் கொண்டது சாத்தியம் என்று தெரிகிறது.

## சிவவாக்கியர்

இவர் பிறக்கும்போதே சிவசிவ என்று சொல்லிக் கொண்டே பிறந்ததால் சிவ வாக்கியர் என்று பெயர் பெற்ருர், இவர் பாடிய பாடல்கள் 526 என்பர். இதற்கு 'சிவவாக்கியம்' என்றே பெயர்.

சிவவாக்கியர்தான் திருமழிசையாழ்வாராக பின்னர் மாறினுர் என்ற ஒரு கருத்துண்டு.

இருவருடைய பாடல்களிலும் கருத்து ஒற்றுமை காணப் படுவதால் இப்படி நினைக்கிருர்களோ என்றும் கூறலாம்,

பூவிலாய ஐந்துமாய் புனலில் நின்ற நான்குமாய்
தீயலாய மூன்றுமாய் சிறந்த காலி இரண்டுமாய்
வேயிலாய ஒன்றுமாய் வேறு வேறு தன்மையாய்
நீயலாமல் நின்ற நேர்மையாவர் காணவல்லாரே.

—சிவவாக்கியர்

பூநிலாய வைந்துமாய் புனற்கண் நின்ற நான்குமாய்
தீதிலாத மூன்றுமாய் சிறந்த காலி இரண்டுமாய்
மீதிலாத ஒன்றுமாகி வேறு வேறு தன்மையாய்
நீதிலாய வண்ணம் நின்னையார் நினைக்க வல்லாரே.

—திருமழிசையாழ்வார்
(திருசந்த விருத்தம்)

சமய சார்புடையவர் சமய சார்பற்றவராக மாறுதல் உண்டு, சமய சார்பற்ற சிவவாக்கியர் சமய சார்புடைய திருமழிசையாழ்வாராக மாறினுர் என்பது ஏற்பதற்கில்லை.

சிவவாக்கியர் சமய சார்பற்றவர் என்பதற்கு சில சான்றுகள்:

கோவிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா?
கோவிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோவிலும் மனத்துள்ளே குளங்களும் மனத்துள்ளே,
நட்டக் கல்லைத் தெய்வம் என்று நாலு புட்பம் சாத்தியே
சுற்றிவந்து முனமுனவென்று சொல்லும் மந்திரம் ஏதடா?
நட்டக் கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்....

## மோனம் என்பது ஞானவரம்பு

மெய்ப் பொருளின் ஆனந்தத்தைக் கண்டவர்கள் அதை விளக்கி எப்படி பேச முடியும்? ஆகவே பேரின்ப நிலையைக் கண்டவர்கள் பேசுவதில்லை.

இதைதான் சிவவாக்கியர் ''விண்டவர் கண்டிலர் கண்டவர் விண்டிலர்'' என்கிருர். உடம்பிலுள்ளே உள்ள மெய்ப் பொருளை அறிவதற்கு முன்தான் பேச்செல்லாம். இதுவே மோன நிலை.

செய்ய தெங்கிலே இளநீர் சேர்ந்த காரணங்கள் போல
ஐயன் வந்திங் கென்னுளம் குடிகொண்டான்
ஐயன் வந்திங் கென்னுள்ளம் கோயில்கொண்ட பின்
வையகத்தில் மாந்தர் முன்னம் வாய் திறப்பதில்லையே
சித்தர் என்றும் சிறியர் என்றும் அறியொணுத சீவர்காள்
சித்தர் இங்கு இருந்தபோது பித்தர் என்று எண்ணுவீர்
சித்தர் இங்கு இருந்தும் என்ன பித்தன் நாட்டிருப்பரே
அத்தன் நாடும் இந்த நாடும் அவர்களுக்கு எல்லாம் ஒன்றே

—சிவவாக்கியர்

## திருமூலர்

கைலாயத்திலிருந்து வந்த சிவயோகி ஒருவர் திருவாவடு துறையில் மூலன் என்னும் உயிர் இழந்த இடையனின் உடலில் புகுந்தார். அவரே திருமூலர் என்று பெரிய புராண வரலாற்றி லிருந்து தெரிய வருகிறது.

இவர் 3000 ஆண்டுகள் வாழ்ந்து ஆண்டு ஒன்றுக்கு ஒரு பாடல் வீதம் பாடியவர் என்று கூறப்படுகிறது.

இவர் இயற்றிய திருமந்திரம் மிகத் தொன்மையான தந்திர சாஸ்திர நூல். ஒன்பது தந்திரங்களில் 3000 பாடல்கள் அடங்கியுள்ளது. இவைகளில் ஆகமக் கருத்துக்கள் கூறப் பட்டிருக்கின்றன.

தந்திரம் என்பது ஆகமத்திற்குச் சிறப்புப் பெயர். தான் நந்தி தேவரிடமிருந்து இவைகளைப் பெற்றதாக அவரே பாயிரத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

பாயிரத்தில் தன் வரலாற்றையும் குரு சிஷ்ய மரபையும் திருமூலர் கூறியிருக்கிறார். கடவுள் வாழ்த்துடன் சிவபரத்து வத்தையும் வலியுறுத்தியிருக்கிறார்.

### முதல் தந்திரம்

உபதேசம் என்ற தலைப்பில் அந்தாதியாகச் சென்று மண்டலித்து முடியும் 30 பாடல்கள் உள்ளன. இதுவே சைவாகம சாரம்.

கொல்லாமை புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை முதலிய பொது தர்மங்கள் அந்தணர் ஒழுக்கம், அரசர் கடமை முதலிய சிறப்பு தர்மங்களையும் விவரிக்கின்றார். கல்வி கேள்வி களையும் இவர் தர்மமாகவே கருதுகிறார். இறைவன் பேரருள் கருணை இதில் இடம் பெறுகின்றன.

### இரண்டாம் தந்திரம்

சிவபெருமானின் படைத்தல் முதலிய ஐந்தொழில்கள், அஷ்ட வீரட்டச் செயல்களின் தத்துவங்கள் கூறப்படுகின்றன.

கோவில், தீர்த்தம் இவைகளின் சிறப்பு, சிவ நிந்தையில் வரும் கேடு, பொறையுடைமை, பெரியாரை துணை கொள்ளல் முதலிய தர்மங்கள். கரு உற்பத்தி முதலியன இடம் பெறுகிறது.

### மூன்றாம் தந்திரம்

யமம் நியமம் முதலிய அஷ்டாங்க யோகங்கள் இவற்றால் பெறும் பயன், அஷ்டமா சித்திகள், காய சித்தி உபாயம், யோக நிலைகள், கோள் நிலைகள் கூறப்படுகின்றன.

**நான்காம் தந்திரம்**

யந்திரங்கள் அவைகளில் அமைய வேண்டிய மந்திரங்கள் குறிப்பிடப் படுகின்றன.

திருஅம்பல சக்ரம், நவாக்ஷரி சக்ரம், சாம்பவி சக்ரம் புவனாபதி சக்ரம். பைரவி சக்ரம் முதலியன விளக்கப்பட்டுள்ளன. பூஜா முறைகளும் பலன்களும் கூறப்பட்டுள்ளன.

**ஐந்தாம் தந்திரம்**

சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடும் சுத்த சைவம்—இந் நால்வகை சைவம், சரியை, கிரியை, யோகம், ஞானம் இந்நான்கு மார்க்கங்கள், சாலோகம், சாமீபம், சாரூபம். சாயுஜ்யம் இந்நான்கு முக்தி நிலைகள், மந்தம், மந்த தரம், தீவிரம், தீவிர தரம் முதலான சத்தினி பாதம், புறச்சமய தூஷணம், நிராசாரம், உட்சமயம் முதலிய நிலைகளும் விளக்கப்பட்டுள்ளன.

**ஆறும் தந்திரம்**

திருவடி பேறு, சிவகுரு தரிசனம், துறவு, தவம் இவற்றின் சிறப்பு, திருநீற்றின் சிறப்பு, சிவவேட உயர்வு, திருவடிப் பேறுக்கான பக்குவம்,

**ஏழாம் தந்திரம்**

கிரியைகள் விளக்கம், சிவலிங்கம் அமைப்பு, சிவலிங்க பூஜையில் பலன், சிவபூஜை முறைகள், மகேஸ்வர பூஜை, குருவை பூஜிக்கும் முறை, போஜன விதி, பிக்ஷா விதி, முத்திரைகள், சமாதிக் கிரியைகள் விளக்கப்படுகிறது.

ஞானிகளை எரித்தால் நாட்டையே எரித்துவிடும். அவர்களை சமாதியில்தான் வைக்க வேண்டும் என்கிறார் திருமூலர், ஞானிகள் உடம்பே கோயில். அவர்கள் சமாதியான இட வழிபாடு இவை விளக்கப்பட்டுள்ளது.

ஐந்து இந்திரியங்களை அடக்கும் முறை, சத்குரு, அசத்குரு விளக்கம்—இவைகளும் இடம் பெற்றுள்ளன,

**எட்டாம் தந்திரம்**

சைவ சித்தாந்த தத்துவங்கள், உடலின் பஞ்ச பேதம், அவஸ்தைகள், அத்துவாக்கள், முக்குணம் இவைகளுடன் வாய்மை, அவா அறுத்தல், பக்தி, முக்தி முதலியவற்றையும் விளக்குகிறது.

**ஒன்பதாம் தந்திரம்**

மூன்று எட்டு தந்திரங்களில் விடப்பட்ட விஷயங்கள் இதில் இடம் பெறுகிறது. பஞ்சாக்ஷர விளக்கம், நடராஜ நடன தத்துவம், சித்தர் பாடல் முறையிலுள்ள சூனிய சம்பாஷணை,

'திருமூலர் ஞானம்' என்ற பெயரில் 11 பாடல்கள் சித்தர் ஞானக் கோவையில் காணப்படுகிறது.

## போகர்

அகண்ட பரிபூரணமா மையர் பாதம் போற்றி
யடுத்து நின்றவுமையவடாய் பாதம் போற்றி
நிகண்டென வேதிருமூல நாதர் பாதம் போற்றி
நீங்காமற் காலாங்கியையர் பாதம் போற்றி
புகழ்ந்து நின்ற நாதாக்கள் ரிஷிகள் பாதம் போற்றி
புகழான வாக்குடைய வாணி பாதம் போற்றி
முகந்து நின்ற குஞ்சரத்தின் பாதத்தைப் போற்றி
மூவுலகு மெய்ச்சுதற்கு நிகண்டு கேளே,

—போகர் நிகண்டு

போகர் திருமூலர் காலாங்கி இவர்களின் சம காலத்தவர். பழனியிலுள்ள தண்டாயுதபாணியை நவபாஷாணத்தைக் கொண்டு அமைந்தவர் இவரே.

காலாங்கியும் புலிப் பாணியும் இவரது மாணக்கர்கள். சப்த சமுத்திரங்களைத் தாண்டிச் சென்று சஞ்சீவி மூலிகைகள் கொண்டு வந்தார் என்று சொல்லப்படுகிறது. சிங்கத்திற்கும் புலிக்கும் ஞான உபதேசம் செய்தவர். இவர் சீனவுக்குச் சென்று வந்தவர் என்ற கருத்தும் நிலவி வருகிறது. இவர் சமாதி பழனி மலையிலுள்ளது.

## புலிப்பாணி

போகரோடு சீன தேசத்திலிருந்து வந்து தமிழ்நாட்டிலேயே தங்கிவிட்டவர். மருத்துவம், ஜால வித்தைகளில் வல்லவர். புலியைப் போலப் பாதத்துடன் விளங்கியவர். வியாக்ரபாதர் என்ற முனியே இவ்வாறு கூறப்படுகிறுர் என்றும் சொல்வர்.

இவரது வைத்தியம் 500 என்னும் நூலிலுள்ள கடைசிப் பாடல்:

ஆமேதான் பண்டிதரேய றையக் கேளும் வனி
தனி வெளி யோருக்கவிழ்த மீந்து

தாமேதான் அன்னமிட்டு வஸ்திரம் ஈந்து தயவாகத்
தன்னுயிர் போல வரைக்காத்து
தீமேதான் சேராமற் புண்ணிய வானாய்த் தீர்க்கமுள்ள
வைத்தியனா யிருந்து வாழ்வாய்
நாமேதான் போகருட கடாட்சத்தாலே நலமாகப்
புலிப்பாணி நவின்றிட்டோமே.

## தேரையர்

இவர் மருத்துவத்தில் அபார நிபுணர். காலனை விரட்டும் தேரையர் என அழைக்கப்பட்டார்.

இவரது 1804 பாடல்கள் அடங்கிய பதார்த்த குண சிந்தாமணி என்ற நூலில் மரம், செடி, கொடி, இவற்றின் பூ இலை, கொட்டை, விதை, காய், கனி முதலியவற்றின் இயல்பு, பறவை, விலங்கு இவைகளின் பால், மலம், மூத்திரம் இவற்றின் இயல்பு இவைகளை மருந்துகளாக உபயோகிப்பது எல்லாம் குறிப்பிடப் பட்டுள்ளன. இக்காலத்தில் சித்த வைத்திய சிகிச்சைக்கு பெரிதும் உதவுகிறது இந்நூல்.

இவர் இயற்றிய இதர நூல்கள் நீர்க்குறி நூல், நெய்க்குறி நூல், தைல வர்க்க சருக்கம், சிகிச்சை ஆயிரம், சிகாமணி வெண்பா, மருத்துவ பாரதம், வைத்திய யமக வெண்பா, நாடிக் கொத்து, நோயணுகா விதி முதலியன.

## மச்ச முனி

இவர் ரசவாத வித்தையில் மிகத் தேர்ந்தவர், வாத நிகண்டு, மச்சமுனி வைப்பு என்பவைகளை இயற்றியவர். இவர் போகரின் சிஷ்யர், இவரே மச்சேந்திரநாதர் எனப் புகழ் பெற்றவர்.

நவநாத சித்தர்கள் வடக்கே பிரபலமானவர்கள். அவர்களில் இவர் ஒருவர். இவர்கள் வழி நாதவழி எனப் பட்டது.

## பாம்பாட்டி சித்தர்

இவர் பாம்பை விளித்துப் பாடிய 130 பாடல்கள் சித்தர் ஞானக் கோவையில் காணப்படுகிறது.

மூலாதாரமாகிய பாம்பினை யோகப் பயிற்சியினால் எழுப்பி மேலேற்றும் திறம் பற்றிப் பாடியதால் இவர் பாம்பாட்டி சித்தர் எனப் பெயர் பெற்றார்.

இவர் கொங்கு நாட்டில் மருதமலையில் தங்கித் தவம் செய்தவர். அங்கு பாம்பாட்டி சித்தர் குகை என்று ஒன்றிருக்கிறது. இவரை சட்டை முனியின் மாணவர் என்பர்.

ஆலடிப் பொந்தினிலே வாழ்ந்த பாம்பே
அரசடிப் பொந்தினிலே புகுந்துக் கொண்டாய்
வாலடி தன்னிலே பார்த்துப் பார்த்து
வாங்கியே தூங்கி நின்றாடு பாம்பே
நாலு தெருவினிலே நாலு கம்பம்
நடுத் தெருவிலே யோர் பொன்னுக் கம்பம்
போலும் விளங்கும் பொன்னுக் கம்பத்னுக்கே
பூமாலை சூட்டியே நின்றாடு பாம்பே.

## சட்டை முனி

இவர் போகருடைய சிஷ்யர், மதுரை வாலைசாமி என்பவர் இவரைத் தன் குரு என்று குறிப்பிடுகிறார்.

''எங்கள் குரு சட்டைமுனி யாரிருநூறும் பாரடி
ஞானப் பெண்ணே''.

சித்தர் ஞானக் கோவையில் கைலாயக் கம்பனி சட்டைமுனி நாயனார் செய்த முன் ஞானம் நூறு பின் ஞானம் நூறு என 200 பாடல்கள் காணப்படுகின்றன.

முன் ஞானப் பகுதியில் சமய ஒற்றுமை விஷயங்களையும் பின் ஞானப் பகுதியில் யோகம் பற்றிய கருத்துக்களையும் இவர் வெளியிட்டிருக்கிறார்.

முன் நூறில் ஒரு பாட்டு:

சமயமெல்லாம் சக்தியுண்டு சிவமுண்டு
சண்டாளர் பிரித்தல்லோ தள்ளினார்கள்
சமயமெல்லாம் வேதாந்த சித்தாந்தமுண்டு
சாதகத்தைப் பாராமல் றயங்கினார்கள்
சமயமெல்லாம் நாதமுண்டு விந்துமுண்டு
காக்காமற் கெட்டார்களு லகத்தோர்கள்
சமயமெல்லாம் அம்பரமாம் ஞானமுண்டு
தாயை விட்ட பாலத்தால் தவறிப் போச்சே:

பின் நூறில் ஒரு பாட்டு:

கும்பித்து மௌனம்தான் குவிந்த பின்பு
கொள்கியதோர் மூலத்தை விட்டு நீயும்
தம்பித்துக் கண்டத்தே நின்றே யூது
தாலடங்கி யுரைத்த பின் மேல் மூலம் நின்று

சொம்பித்தே அறிவோடேமௌனம்பூரி
சுகமாய்ப் பூரணத்தை யதற்குட் கும்பி
தம்பித்து மனத்தொடுரே சகத்தைப் பண்ணு
தலமான பிரமமென்று பிராணனுச்சே.

## கோரக்கர்

இவர் மச்சேந்திர முனியின் சிஷ்யர். இவர் கஞ்சாவை முதல் சரக்காகக் கொண்டதால் அதற்கு கோரக்கர் மூலி என்று பெயர் ஏற்பட்டது. வடநாட்டில் பிரசித்தி பெற்ற நவநாதர்களில் இவரும் ஒருவர். இவர் கோரக்கநாதர் என்றழைக்கப் பட்டு வந்தார்.

## கொங்கணர்

இவர் போகரின் மாணவர். இவர் கோயம்புத்தூருக்கு அருகில் வசித்ததாகக் கூறுவர்.

தவமிருக்கும்போது மரத்தின் மீதிருந்த கொக்கு ஒன்று இவர் மீது எச்சமிட இவர் அதை நிமிர்ந்து பார்க்க அது எரிந்து சாம்பலாயிற்று. இவர் பிக்ஷைக்கு வந்த இடத்தில் குடும்பத் தலைவி கால தாமதம் செய்ததால் விழித்து அவளைப் பார்க்க அவள் ''கொக்கென்று என்னை நினைந்தாயோ கொங்கணவா?'' என்றாளாம்,

இவர் சில வைத்திய நூல்களை எழுதியிருக்கிறார். இவர் பாடிய கொங்கணர் ஞானம் என்பதில் ஒரு பாட்டு.

கடவுளோ னொருவனுண்டே வேதமொன்றே
காரண சற்குரு தீக்ஷை தானுமொன்றே
அடைவுடனே யவனருளும் பதவி யொன்றே
அம்புவியின் மனுப்பிறவியான தொன்றே
நடைவழியும் பலமனுவோர்க் கொன்றே
யல்லானல் வேத மறுசமய நடக்கை வேறுத்
திடமுடைய தேவர் பலருண்டென் போர்கள்
தீநரகுக்குள்ளாவர் திண்ணம் தானே.

## குதம்பை சித்தர்

சித்தர் ஞானக் கோவையில் இவர் பாடல்கள் 32 காணப் படுகின்றன. குதம்பை என்கிற காதணியை அணிந்த பெண்ணைப் பார்த்து பாடியதாக இவர் பாடல்கள் அமைந்திருப்பதால் இவருக்கு குதம்பை சித்தர் எனப் பெயர் ஏற்பட்டது.

இவர் வேறு நூல்கள் எதுவும் எழுதியதாகத் தெரியவில்லை. குதம்பை என்பது ஒரு மூலிகைக்கும் பெயர்.

ஆதாரமான அடிமுடி கண்டோர்க்கு
வாதாட்ட மேதுக்கடி குதம்பாய் வாதாட்ட மேதுக்கடி?
செத்தாரைப் போல திரியும் மெய்ஞானிக்கு
கைத்தாள மேதுக்கடி குதம்பாய் கைத்தாள மேதுக்கடி?
மாங்காய் பாலுண்டு மலைமேல் இருப்போர்க்கு
தேங்காய்ப்பால் ஏதுக்கடி? குதம்பாய் தேங்காய்ப்பால்
ஏதுக்கடி?

## கருவூரார்

இவர் கருவூரில் வாழ்ந்ததால் கருவூரார் எனப் பெயர் பெற்றார்.

சைவத் திருமுறை ஒன்பதாவதில் பத்து பதிகங்கள் இவர் பாடியது சேர்க்கப்பட்டுள்ளது. இவர் பாடல்களில் 'கருவூரன்' என்ற முத்திரை காணப்படுகிறது. இவர் போகரின் மாணவர்.

தஞ்சையில் ராஜராஜ சோழன் கட்டிய பெரிய கோவிலில் சிவலிங்க அஷ்ட பந்தனத்தை இவரே செய்வித்தார் என்ற ஒரு வரலாறு உண்டு.

சித்தர் ஞானக் கோவையில் கருவூரார் பூஜா விதி என்ற பெயரில் 30 பாடல்கள் காணப்படுகின்றன. அதில் ஒன்று போலிச் சாமியார்களைக் கண்டிப்பதாக உள்ளது.

புகலுவார் வேதமெல்லாம் வந்ததென்று
பொய்ப் பேசி சாத்திரங்கள் மிகவும் கற்றே
அகலுவார் பெண்ணாசை விட்டோம் என்றே
அறிவுகெட்டே ஊர்தோறும் சுற்றி சுற்றி
சகலமுமே வந்தவர்போல வேடம் பூண்டு
சடைமுடியும் காஷாயந் தன்னைச் சாற்றி
இகலுமன மடங்காமல் நினைவு வேறாய்
எண்ணமெல்லாம் பெண்ணாசை பூஜைதானே.

## காகபுசுண்டர்

சித்தர் ஞானக் கோவையில் இவர் இயற்றியதான காகபுசுண்டர் ஞானம், காகபுசுண்டர் உபநிஷதம், காகபுசுண்டர் காவியம் ஆக 159 பாடல்கள் காணப்படுகின்றன.

காகபுஜண்டருக்கு 1008 சிஷ்யர்கள். இவர் முருகப் பெருமானின் அம்சம் என்று கூறப்படுகிறது.

சிவம் சக்தி முருகன் மூவரும் ஒருவரே என்பதை இவர் விளக்கி வந்தார்.

அஷ்ட சக்திகளில் ஒருவளான அலம்புடையின் வாகனம் சண்டன் என்னும் காகம். பிரும்ம சக்தியின் வாகனமானது அன்னம். இவ்விரண்டுக்கும் பிறந்தவர் காகபுஜண்டர்.

இப்புஜண்டர் தாரணு சக்தியினால் ஸ்தூல உடம்பை விடாது எமனை வென்று மற்ற யோகிகள் இறந்துபோனபோது கூட அழியாமல் நின்றார். பிரளயத்தை வென்ற காகம் என்று புகழப்படுகிறார்.

உபமன்யு மகரிஷி தெய்வீக சக்தி பெற்றவர். பல்வேறு புராணங்களிலும் சிறப்பித்துக் கூறப்படுபவர். இத்தகைய மகரிஷியிடம் காகபுஜண்டர் தீக்ஷை பெற்று பஞ்சாட்சரம் உபதேசம் கேட்டு உலகில் குருநாதரிடம் சீடர்கள் எவ்வாறு பணிவுடன் இருக்க வேண்டும் என்பதை உணர்த்தினார்.

உபமன்யு மகரிஷியின் உபதேசம் பெற்ற காகபுஜண்டருக்கு கைலையிலே சிவபெருமானுக்கு பணிபுரியும் நந்தியம்பெருமான் தோழனாகி பற்பல உதவிகளை செய்தார். பிரார்த்தனையால் உலகில் சாதிக்க முடியாததையும் சாதிக்கலாம் என்று உணர்த்தினார். காகபுஜண்டர் அருட்கலையாம் நாடி கலையின் தத்துவத்தை இன்னதென்று பாரோர் அறிந்து பலனடையச் செய்தார்,

காகபுஜண்டர் அஷ்டதிக்குகளிலும் விஜயம் செய்து தன் பெருமையை நிலைநாட்டி பக்தி நெறி இன்னதென பரிந்து காட்டி பாரோர் உய்யும் வழிகாட்டி, சக்தி நெறியில் பாமரரையும் கூட்டி பற்பல அருளாடல்கள் புரிந்து வந்தார்.

இவர் வசிஷ்டரிடம் தன் வரலாற்றையும் சதுர்யுகத்தில் தான் கண்ட அதிசயத்தையும் கூறி உம்மைப் போல எட்டு வசிஷ்டர்களைக் கண்டிருக்கிறேன் என்று கூறியதாக அபிதான சிந்தாமணியில் காணப்படுகிறது.

இவர் காகம்போல் பார்வையுடையவர் என்பதால் இப்பெயர் ஏற்பட்டதென்பதை இவரே கூறுகிறார்.

''காணாத காட்சியெல்லாம் கண்ணிற் கண்டு
காகமடா புசுண்டரென்ற பேரும் பெற்றேன்''

மற்ெருரு இடத்தில்

**நேத்திரத்தை காகம் போல் நிச்சயமாய் நிற்க**
**ஆத்துமத்திலானந்தமாம்.**

இவருடைய பாடல்களில் மற்ெருன்று
**கேளப்பா இப்படியே பிரளயந்தான்**
கிருபையுடன் ஏழுலட்சம் கோடியானல்
ஆளப்பா அரி அயனும் சிவ செந்தும்
**அகண்டமென்ற பிரும்மத்தில் அடங்குவார் கதை**
நாளப்பா நானும் அந்தப்படியே செல்வேன்
நலமாக இன்னமுந்தான் அகண்டமானல்
வாளப்பா காகமென்ற ரூபமானேன்
வடவரையின் கூடு தொத்தி இருந்தேன் பாரே.

## அகப்பேய் சித்தர்

இவர் பேயாக அலையும் தன் மனதை அப்படி அலைபாயாதே என்று அறிவுரை கூறி பாடியதால் அகப்பேய் சித்தர் எனப் பெயர் பெற்ருர். இவர் மறைசொற்களைக் கொண்ட பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார்.

தன்னையறிய வேணும் அகப்பேய்
சாராமற் சார வேண்டும்
பின்னை யறிவதெல்லாம் அகப்பேய்
பேயறிவாகும்படி
தானற நின்றவிடம் அகப்பேய்
சைவம் கண்டாயே
சைவம் யாருக்கடி அகப்பேய்
தன்னை அறிந்தவர்க்கே.

சித்தர் ஞானக் கோவையில் இவர் பாடிய 100 பாடல்கள் காணப்படுகின்றன. வேறு எதுவும் இவர் பாடியதாகத் தெரியவில்லை.

## அழுகணி சித்தர்

இவர் பாடல்கள் அழுது பாடுவதாக அமைந்திருக்கும் காரணமாக இப்பெயர் பெற்ருர். ஒரு உதாரணம்:

ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்கு கிட்டுவதில்லை
மாற்றிப் பிறக்க மருந்து எனக்கு கிட்டுமென்ருல்
ஊற்றை சடலம் விட்டே என் கண்ணம்மா
உன்பாதம் சேரேனே.

அழுகண்ணி என்பது ஒரு மூலிகையின் பெயர்:

பாரப்பா, தந்திமூலி பச்சிலை நாலு வர்ணம்
ஆரப்பா அதுக்கே பேர்தான் அழுகண்ணி என்று சொல்வர்
சேரப்பா யிலைக்கிலைதான் செலம் விழுந்திருக்குமப்பா
சாரப்பா யிலையைப் பார்த்தால் சணப்பிலை போலத்
தோன்றும்.
—வாத காவியம்

## இடைக்காட்டு சித்தர்

இரு இடையர்கள் பேசிக் கொள்வது போல இவர் பாடல்களைப் பாடியுள்ளார், உரையாடும் இரு இடையர் பெயர்கள் தாண்டவர் கோன், நாராயணக் கோன்.

திருவண்ணாமலையில் இடையர் குடியில் இவர் பிறந்தவர். சைவ சமய நாயன்மார்களில் ஒருவராகிய ஆனாய நாயனாரே இடைக்காட்டு சித்தர் என்ற பெயரோடு விளங்கினார் என்றும் சொல்லப்படுகிறது. சித்தர் ஞானக் கோவையில் இவருடைய 140 பாடல்கள் காணப்படுகின்றன.

சாவா திருந்திட பால்கற—சிரம்
தன்னிலிருந்திடும் பால்கற
வேவாதிருந்திடப் பால்கற—வெறு
வெட்டவெளிக்குள்ளே பால்கற.
மனமெனும் மாடு அடங்கிற் தாண்டவக் கோனே—முக்தி
வாய்த்ததென்று எண்ணடா தாண்டவக் கோனே.

## யாகோபு இராம தேவர்

இவர் பிறப்பினால் முஸ்லிம். ராமதேவர் என்ற பெயரை இவர் கொண்டிருந்தார் எனத் தெரிகிறது, சித்தர் ஞானக் கோவையில் ராமதேவர் பூஜா விதி என்ற பெயரில் 10 பாடல்கள் காணப்படுகின்றன. இவை மாந்திரீகம் பற்றியவை.

சித்தான மூன்றெழுத்துச் செயலாம் சோதி
சீரியவை யுங்கலியும் சவ்வுமாகி
முத்தான லட்ச உரு செபிக்கச் சித்தி
முற்றிடுமே எதிரி என்ற பேய்கட்குத்தான்
வித்தான வித்தையடா முட்டும் பாரு
விரிவான முகக் கருவு மூன்று கேளு
சத்தான அதன் கருவும் சிலையில் வைத்து
சதுரான விதி விவரமறியக் கேளே.

இவர் நாகப்பட்டினத்தில் தங்கி சிவ பூஜை செய்து சித்த ராஞர் என்று சொல்லப்படுகிறது.

## ரோம ரிஷி

இவர் புசுண்டரின் மகன் என்றும் சொல்வர். 'புசுண்டர் மகன் ரோமன்' என்று ஒரு இடத்தில் இவரே கூறுகிருர். சித்தர் ஞானக் கோவையில் 13 பாடல்கள் இவர் பெயரில் காணப்படுகின்றன.

இவரது வைத்தியம் 500ல் ஒரு பாட்டு.

அம்பரத்தில் ஆடுகின்றவையர் பாதம்
அனுதினமும் மனதில் வைத்து அருளும் பெற்று
தம்பரத்தில் எனையாண்ட புசுண்டர் பாதம்
சதாநித்தம் பூஜை பண்ணி தாசனுகி
பம்பரம்போல் உலகமெல்லாம் ஆட்டி வைக்கும்
பராபரத்தின் கிருபையதால் பாசம் நீங்கும்
செம்பருத்தி பூவதுபோல் சிவந்து நின்ற
சின்மயத்தின் பாதமலர் ஜோதி காப்பே.

## தன்வந்திரி

சித்த வைத்திய முறைக்கு அகஸ்தியரை அடிப்படையாகச் சொல்லுவது போல ஆயுர்வேத மருத்துவத் துறைக்கு தன்வந்திரியை அடிப்படையாகக் கூறுவர்.

பாற்கடலில் பிறந்த தன்வந்திரியின் மறு பிறப்பு என்றும் சொல்வர், சுசுருத்தர் என்ற வைத்ய மேதை இவரது சிஷ்யர். வாகட நூலில் வல்லவர் தன்வந்திரி.

## திருமூலர் தெரிவிக்கும் சித்த மார்க்கம்

திருமூலரின் சைவ சித்தாந்தம் பொதுவாக சித்த மார்க்கம் என்றே குறிப்பிடப்படுகிறது. சித்தர் சிவத்தைக் கண்டவர் என்று சொல்கிருர். இவருடைய சித்தி மார்க்கமும் பக்திக்கும் முக்திக்கும் எதிரிடையான மார்க்கமல்ல.

''யோகச் சமாதி உகந்தவர் சித்தரே'' என்று அவர் கூறுகிருர். நடமாடும் குகையாகிய உடம்பிலே உணர்வு என்ற பீடத்தில் அமர்ந்து இதயத்தில் சமாதி பெறலாம் என்று சொல்லுகிருர்.

சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதும் சுத்த வெளியிலே

என்று நிந்தாஸ்துதியாகக் குறிப்பிடுகிறார், தொண்டரடிப் பொடி ஆழ்வாரும் யோகிகளை சுத்த சோம்பர் என்றே கூறுகிறார்.

தூங்கிக் கண்டார்கள் சிவலோகம் தம்முள்ளே
தூங்கிக் கண்டார்கள் சிவயோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார்கள் சிவபோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் நிலை சொல்வது எவ்வாறே

என்று ஹாஸ்யமாக உபதேசிக்கிறார், இகத்தை மறந்த தூக்கம் பரத்தை காட்டிவிட்டது என்பது பொருள், உண்மையில் இத் தூக்கத்தை விழிப்பு என்றே சொல்ல வேண்டும். இவர்கள் யோகத்திலே போகத்தைக் காண்பார்கள். வாழ்க்கையாகிய போகத்திலே சிவயோகத்தைக் காண்பார்கள்.

மனிதர்கள் இந்நிலையை அடைய முடியும். தெய்வ நம்பிக்கையும் தெய்வ நாட்டமும் இல்லாதவர்கள் அடைவது பெரும் தூக்கமே (மரணமே),

'ஊன் தெய்வம் என்பவருக்கு நான் தெய்வம்' என்று யமன் வருகிறானாம். இவர்களைப் பற்றி திருமூலர் பாடிய பாடல்

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை யுண்டார்
மடக்கொடியாரோடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே.

கள்ளம் ஒழிந்தால் உள்ளது காணும் என்ற நிலையை அடைந்தவர்கள் — யோகத்தால் அடைந்தாலும் பக்தியால் அடைந்தாலும் சித்தியால் அடைந்தாலும் ஒழுக்கம் வேண்டும். இந்திரிய ஜயம் இன்றியமையாதது.

## மனப்பூட்டைத் திறக்க

இந்த உடம்பையே திறவுகோலாகக் கொண்டு மனப் பூட்டைத் திறக்க வேண்டும்.

ஸ்தூல உடலை மறந்து ஸூக்ஷ்ம உடலுக்குள் புக வேண்டுமாம். இதைச் செய்வதே யோகம் என்கிறார்கள் சித்தர்கள், இந்த ஸ்தூலத்தைக் கொண்டுதான் சூழ்மத்தில் பிரவேசிக்க வேண்டும்.

ஸ்தூலத்தை விட்டுவிட்டே யாகில் அதில்
　　ஸூட்சுமத்தைக் காண முடியாது
பாலத்தில் ஏறி நடந்தாக்கால்
　　பெரும்பாதை இதுவல்லவோ ஞானப் பெண்ணே.
இப்பாதையில் போனால் ஒரு பட்டினம் வருமாம்.
நாதமும் கீதமும் கேட்குதடி—தெய்வ
　　நாயகன் சந்நிதி முன்பாக—தெய்வ
　　　　நாயகன் சந்நிதி ஞானப் பெண்ணே !

உடம்புக்குள்ளே, ஸ்தூல நினைவுகளை விட்டுவிட்டு, நுட்பமான நுண்ணுடலுக்குள்ளே புகுந்தோமானால், அந்த மாவட்டத்திலே நாதமும் கீதமுமாகக் கேட்டுக்கொண்டே இருக்கிறது "ஏ, ஞானமான பெண்ணே, ஞான வடிவே, அந்த இடந்தான் தெய்வ நாயகனுடைய சந்நிதியடி!" என்று கும்மி தட்டுகிறார் சித்தர்!

எதற்காக உடம்பு வேண்டும் என்றால், அதை மறப்பதற்காகவே அது வேண்டும்! தூலத்தை விடுவதற்காகவே தூலம் வேண்டியிருக்கிறது! உடம்பைக் கொண்டுதான் உடம்பை மறக்கடிக்க வேண்டும்! உடம்பைக் கொண்டுதான் உடம்பை விட்டொழிக்க வேண்டும்! உடம்பைக் கொண்டுதானே இந்த உடம்புக்கு உள்ளே புக வேண்டியதிருக்கிறது! பரு உடல் இல்லை என்றால், நுண்ணுடலுக்குள் புகுந்து செல்வதற்கு வழி ஏது? இதுவே சித்தர் ஞானம்!

நந்தவனத்தில் ஒரு ஆண்டி
　　நாலாறு மாதமாய் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி
　　கூத்தாடி கூத்தாடி போட்டுடைத்தாண்டி.

—கடுவெளி சித்தர்

குயவன்-பிரும்மா. ஆண்டி-ஜீவன். தோண்டி-உடல். போட்டு உடைப்பது-மரணம்.

மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டு என்று
　　மகிழ்வதெல்லாம்
கேடுண்டு எனும்படி கேட்டுவிட்டோம்
　　இனிக் கேண் மனமே
ஓடுண்டு கந்தையுண்டு உள்ள எழுத்து
　　ஐந்தும் உண்டு
தோடுண்ட கண்டனடியார்
　　நமக்குத் துணையும் உண்டே.

—பட்டினத்தார்

ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு
　　உயிர் செல்வமெல்லாம்
அன்றென்றிரு; பசித்தோர் முகம் பார்
　　நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு நடுநீங்காமலே
　　நமக்கு இட்டபடி
என்றென்றிரு நெஞ்சே
　　உனக்கு உபதேசம் இதே.

—பட்டினத்தார்

சித்தர்கள் ஒருவர் மாதிரி ஒருவர் இல்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதம். இந்த சித்தர்கள் உலகமெங்குமே இருந்திருக்கிறார்கள். ஊனக் கண்ணுக்குத் தெரியாதபடி தமிழ் நாட்டில் இன்றும் இருந்து வருகிறார்கள். சிலர் பாடல்கள் பாடியிருக்கின்றனர், சிலர் மௌனமாகவே இருந்திருக்கின்றனர்.

சித்தர் பாடல்கள் சில மிக எளிதில் புரியும், சில வார்த்தைகள் எளிதாக இருக்கும் ஆனால் அவற்றில் தத்துவம் பொதிந்து கிடக்கும். சில பாடல்கள் ஞானப் பயிற்சி பெற்றவர்களுக்கே புரியும்.

பல விஞ்ஞான உண்மைகளை சித்தர்கள் அன்றே வெளியிட்டிருக்கிறார்கள்.

உடல் பயிற்சியால் உள்ளத்தைப் பண்படுத்தி உள்ளத்தின் பயிற்சியால் உடலைக் கட்டிக்கும் உபாயத்தை சித்தர்கள் வெளியீட்டுள்ளனர். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதை பல சித்தர்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

''காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா'' என்கிறார் ஒரு சித்தர்.

''ஊத்தை சடலம் என்று எண்ணாதே இதை உப்பிட்டப் பண்டம் என்று எண்ணாதே'' என்கிறார் மற்றொரு சித்தர்.

இதில் எது உண்மை? இரண்டுமே உண்மைதான்.

இந்த உடலுக்கு அழியக் கூடிய தன்மை உண்டு. ஆனால் பிறவியை அழியாது பாதுகாக்கக் (மரணமில்லாப் பெரு வாழ்வு) கூடிய மாபெரும் ஆற்றலும் இதற்கு உண்டு. திருமூலர் 'ஊனுடம்பே ஆலயம்' என்கிறார். பொய்யில் மெய்யைக் காண வேண்டும் என்கிறார்கள் சித்தர்கள்.

உயிர் ஒரு துறவி அல்லது ஆண்டி. இன்பமாகட்டும் துன்பமாகட்டும் உயிரைப் பாதிப்பதில்லை. உடலைத்தான் பாதிக்கிறது. இந்த உயிர் ஒரு உடலில் நிலையாக நிற்பதில்லை. ஆண்டிபோல சுற்றுகிறது.

## பூசலார் கட்டிய கோயில்

புறவழிபாட்டின் பயன் அக வழிபாட்டால் விளையும். வழிபாட்டுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை யென்றால் மனம் இருக்கிறதல்லவா? அதைக் கொண்டு வழிபட வேண்டும். அப்படி வழிபட்டவர் பூசலார் நாயனார்.

போதும் பெறுவிடில் பச்சிலையுண்டு
புனலுண் டெங்கும்
ஏதும் பெறுவிடில் நெஞ்சுண்டு
இன்றே இணையாகச் செய்யும்
சூதும் பெருமுலை பங்கர்தென்
தோணிபுரேசர் வண்டி
தாதும் பெறுத அடித்தாமரை
சென்று சார்வதற்கே.

பூசலார் மானஸீகமாக ஒரு கோயில் கட்டினார். பல்லவ மன்னனும் ஏராளமான பொருட் செலவில் காஞ்சி கைலாச நாதர் கோயிலை கட்டினான். இரண்டுக்கும் கும்பாபிஷேகம் ஒரே தினத்தில். இறைவன் பூசலார் கட்டிய ஞானக் கோயிலையே விரும்பினார். மன்னனின் கனவில் இறைவன் தோன்றி, தன் பக்தன் பூசலார் திருநின்றவூரில் (தின்னனூர்—சென்னைக்கு அருகில் உள்ளது) கட்டிய ஆலயத்திற்கு நான் போக வேண்டியிருப்பதால், ''உன் கோயில் கும்பாபிஷேகத்தை நாளைக்கு ஒத்திப் போடு'' என்றார்.

அரசன் திருநின்றவூர் சென்று பார்த்தான். அங்கு கோயில் எதுவும் கட்டப்பட்டிருக்கவில்லை.

மனதினால். பூசலார் ஆலயம் கட்டியதை சேக்கிழார் விளக்கிறார்.

அடிமுகல் உபானமாதி ஆகிய படைகள் எல்லாம்
வடிவுறுந் தொழில்கள் முற்றும் மனத்தினால் வகுத்துமான
முடிவுறு சிகரந்தானு முன்னிய முழத்திற் கொண்டு
நிரம்பிட நினைவால் நினைத்தார்.

அரசன் காடவர்கோன், ''ஐயா! நீர் கட்டிய கோயில் எங்கே? இறைவன் என் கனவில் வந்து உங்கள் ஆலய கும்பாபிஷேகத்திற்கு வருவதாகச் சொன்னாரே!'' என்பதை,

மன்னவன் உரைப்ப கேட்ட அன்பர்தாம் வெருண்டு
நோக்கி
என்னையோர் பொருளாக கொண்டே எம்பிரான் அருள்
(செய்தாரேல்
முன்வரு நிதியிலாமை மனத்தினால் முயன்றகோயில்
இன்னதாம் என்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச்
சொன்னார்.

பூசலாரையே நேரில் சந்தித்து, அவர் கட்டியது மானஸீகக் கோயில் என்பதை அறிந்து வியந்தான்.

அரசன் செய்தது திரவிய யக்ஞம்.
பூசலார் செய்தது ஞான யக்ஞம்.

இறைவனின் உருவத்தை மனதில் தியானிக்கும்பொழுது, அவருடைய இறைத்தன்மை, ஸௌலப்ய கல்யாண குணங்கள் நம் மனதில் பதிய வேண்டும்.

''குழல் இனிது யாழ் இனிது'' என்கிறோம். வெறும் புல்லாங் குழலும், யாழுமா இனிது? அவைகளிலிருந்து வெளிப்படும் ஒலி அல்லவா இனிது. எப்படிக் குழலையும் அதன் இசையையும் பிரிக்க முடியாதோ. அதேபோல இறை உருவத்தையும், இறைத் தன்மையையும் பிரிக்க முடியாது. இறையுணர்வு என்ற மணத்தைப் பரப்பும் மலராக இறை உரு இருக்கிறது.

''பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய் கண்டான்'' என்று தாயுமானவரால் புகழப் பெற்றவர் மெய் கண்டார். அவர் கூறுவதாவது:

பண்ணையும் ஓசையும் போல பழமதுவும்
எண்ணுஞ் சுவையும் போல எங்குமாம்—அணணல்தாள்
அத்துவித மாதல் அருமறைகள் ஒன்றென்னாது
அத்துவிதம் என்றறையும் ஆங்கு.

அரக்கொடு சேர்த்தி யணைத்த அக்கறபோல்
உருக்கி உடங்கியைந்து நின்று--பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று,

அதுஇது என்றதது வல்லான் கண்டார்க்கு
அதுவிது வென்றதையும் அல்லான் பொதுத்தனில்
அத்துவிதமாதல் அகண்டமும் தெய்வமே
அத்துவிதி அன்பில் தொழு.

கட்டினின்றும் நீங்கிய நிலையில் உயிர் இறைவனைப் போன்றிருக்கு மாயினும் முன்னர் ஆணவத்தோடு இரண்டற்ற நிலையிலிருந்ததுபோல் இப்போது இறைவனோடு இரண்டற்ற நிலையிலிருக்கு மாயினும் சிறுமை நீங்கிய நிலையிலும் இறைவனைத் தொழலே உயிரின் தவிர்க்கக் கூடா கடமை என்கிறார் மெய்கண்டார்.

# முடிவுரை

சித்தர்கள் ஆன்ம விடுதலையை விரும்பி நின்றாலும் உடலில் உயிர் உள்ள வரை உலகியல் துன்பங்களிலிருந்து அதைக் காக்க வேண்டுமாதலின் சமுதாயத் தீமைகளிலிருந்து காத்துக் கொள்ளும் வழிகளைக் கூறியுள்ளனர்.

சமுதாயக் கொடுமைகளில் தலைமை வகிப்பது வறுமை. உடலுழைப்பும் உள்ளத்தின் தெம்புமே வறுமை நீக்கத்திற்குத் துணை புரியும்.

சமுதாயத்தில் ஜாதிக் கொடுமை ஒரு தொடர் நோய். இந்த ஜாதிக் கொடுமை சமுதாய நல்வாழ்விலிருந்து மனிதனை பிரித்துவிடக் கூடியது. சித்தர்கள் ஜாதி முறையிலிருந்து மனிதன் விடுபட வேண்டும் என்றும் அவன் எவ்வுயிர்க்கும் இரங்கும் இயல்புடையவனாக இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்தியுள்ளனர்.

''நால் வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலாம் நவின்ற கலைச் சரிதமெல்லாம் பிள்ளை விளையாட்டே'' என்று கூறி மனித குலத்தை ஒன்றாகக் கண்டனர்.

கொடும் பசி, நெடும் பிணி, தளர் மூப்பு போன்றவைகளை வென்று அவைகளை நீக்க சித்தர்கள் பாடுபட்டனர். அவர்கள் முயற்சி இன்னும் நீடிக்கும் நிலையே இருந்து வருகிறது.